அம்புலிமாமா

மதிமுகம் : 108 நவம்பர் : 2004 புன்னகை : 11

## சிறப்புப் படைப்பாக



மாய மந்திரவாதி 9



நவீன வேதாளக் கதை 15



அயல் நாட்டுக் கதைகள் 22



மகாவிஷ்ணு 49

## பொருளடக்கம்



SUBSCRIPTION

**For USA and Canada**
**Single copy $2**
**Annual subscription $20**
***Remittances in favour of Chandmama India Ltd.***
to
Subscription Division
CHANDAMAMA INDIA LIMITED
No. 82, Defence Officers Colony
Ekkatuthangal, Chennai - 600 097
E-mail :
subscription@chandamama.org

**பரிசளிப்புச் சந்தா**

இந்தியாவைத் தவிர மற்ற எல்லா நாடுகளுக்கும் விமானத் தபால் வாயிலாக பனிரெண்டு இதழ்களுக்கு ரூ.900/- இந்தியாவிற்குள் ரூ.144/- **புக்போஸ்டில்** உங்கள் சந்தாத்தொகையை டி.டி வாயிலாகவோ அல்லது மணியார்டரிலோ **சந்தமாமா இந்தியா** லிமிடெட் என்ற பெயரை எழுதி அனுப்பவும்.



நிறுவியோர்
பி. நாகிரெட்டி, சக்ரபாணி

# கனவு காணுங்கள்

குழந்தைகள் தினத்தை நினைவு கூரும் வகையில் இந்த ஆண்டும் ஒரு குழந்தைகள் தினச் சிறப்பிதழை உங்களுக்கு அளித்திருக்கிறோம். இடைக்காலத் தேர்வுகளுக்கும், அரையாண்டுத் தேர்வுகளுக்கும் இடையில் வரும் நவம்பர் மாதத்தில் குழந்தைகளுக்குச் செய்ய வேண்டிய செயல்கள் ஏராளமாக இருக்கும்.

கடந்த ஐந்து ஆண்டுகளாக *அம்புலிமாமா* ஒரு குறிப்பிடத்தக்க ஆக்கப்பூர்வமான செயலை செய்துவருகிறது. குழந்தைகள் தின சிறப்பிதழுக்காக, குழந்தைகளை சிறு கதைகள் எழுதச் செய்து, திறமையுள்ள சில இளம் ஓவியர்களை சென்னைக்கு வரவழைத்து, அந்தக் கதைகளுக்குப் பொருத்தமான சித்திரங்களை வரையச் செய்கிறது. அந்த அழகான சிறு கதைகளையும் அவற்றுக்குப் பொருத்தமான சித்திரங்களையும் நீங்கள் இந்தச் சிறப்பிதழில் கண்டு, படித்து, மகிழப் போகிறீர்கள்.

தேர்வுக்கு வந்த சிறுகதைகளை கவனித்துப் பார்க்கையில் பெரும்பாலான கதைகள் கனவுகளை மையமாகக் கொண்டு அமைந்திருப்பது ஆச்சரியப்படச் செய்கிறது. குழந்தைகள் கற்பனை வளம் மிக்கவர்கள் என்பதும், அந்தக் கற்பனைகளே கனவுகளை உண்டாக்குகின்றன என்பதும் நாம் அறிவோம். சில சமயம் அழகாகச் சித்தரிக்கப்பட்ட கதைகள் கடைசியில் கண்டதெல்லாம் கனவுதான் என்றதும் நம்முடைய உணர்ச்சிகளை என்னவென்று சொல்வது!

அறிவுத் தாகமும் அடங்காத ஆர்வமும் கொண்ட குழந்தைகளுடைய கதைகளில் யதார்த்தமும் நிரம்பியிருந்தால் மிக மிகச் சிறப்பாயிருக்கும். நமது மதிப்பிற்குரிய ஜனாதிபதி டாக்டர் அப்துல்கலாம் அவர்களின் கூற்றுப்படி, படிப்பதோடு மட்டுமன்றி குழந்தைகள் தங்கள் எதிர்காலத்தைப் பற்றியும் தாய் நாட்டைப் பற்றியும் கனவு கண்டு கொண்டே இருக்க வேண்டும்.

*ஆசிரியர் :* **விஸ்வம்**





# ‘கனவு காண்போம் வாருங்கள்’ கட்டுரைப் போட்டி

நான் தற்போது பயின்று கொண்டிருக்கும் ஆறாவது வகுப்பில் எனது ஆசிரியர்கள் நடத்திய பாடங்களை மிகுந்த கவனத்துடன் கேட்பேன். கற்பித்தப் பாடங்களை முழுமையாக சீராகப் படித்தேன். தேர்வுகளில் மிகச் சிறப்பான மதிப்பெண்கள் பெற்று வகுப்பில் இரண்டாவதாக வந்து அதற்குரிய பரிசும் பெற்றேன். இந்த ஆண்டு ஆகஸ்ட் 15ந் தேதி பள்ளியில் நடைபெற்ற சுதந்திர தின விழாவில் எங்கள் தொகுதி எம்.எல்.ஏ-யின் திருக்கரங்களால் பரிசு பெறும் பேற்றினையும் அடைந்தேன்.

ஒவ்வொரு நாள் மாலையும் விடுமுறை தினங்களில் பாதி நாளும் என் வீட்டின் அக்கம்பக்கத்திலுள்ள பள்ளி செல்ல இயலாத சிறுவர் சிறுமிகளுக்கும், குடும்பப் பெண்களுக்கும் என்னால் இயன்ற அளவு கல்வி கற்றுத் தந்து கொண்டிருக்கிறேன். முதன் முதலில் என் பாட்டிக்கு கல்வி கற்றுக் கொடுக்க ஆரம்பித்தேன்.

என்னுடைய வீட்டின் பின்புறத் தோட்டத்தில் பப்பாளி, சீதா, கொய்யா ஆகிய பழமரங்களின் கன்றுகளையும், துளசிச் செடிகளையும் முன்புறம் நல்ல நிழல் தரக்கூடிய வேப்பமரம் முதலியவைகளையும் பயிரிட்டு அவற்றிற்கு தினமும் தண்ணீர் பாய்ச்சி வருகிறேன். இவை வளர்ந்து இவற்றில் குலுங்கும் மலர்களையும், காய்களையும் கண்டு மகிழ்கிறேன். தவிர சாலையிலுள்ள மரக்கன்றுகளை ஆடுமாடுகள் மேய்ந்து விடாமல் சுற்றி முள்வேலி போட்டிருக்கிறேன்.

மது அருந்துபவர்களையும் சூதாடுபவர்களையும் திருத்த வேண்டும் என்ற விருப்பம் இருந்தாலும் வயதில் நான் சிறியவனாக இருப்பதால் இவற்றை இப்போது என்னால் செய்ய முடியவில்லை. ஆனால் வளர்ந்து பெரியவன் ஆனதும் என் நண்பர்களை உடன் திரட்டி அவர்களுடன் கூட சேர்ந்து பல ஆக்கப்பூர்வமான சமூகப் பணிகளைச் செய்வேன். மது அருந்தும், சூதாடும் பழக்கமுள்ளவர்களை திருத்துவது எனது லட்சியமாக இருக்கும்.

கல்வியில் கவனம் செலுத்திப் படித்து முடிந்து, மாவட்ட அதிகாரியாகவோ அல்லது அதற்கு இணையான ஒரு பொறுப்புள்ள பதவியில் அதிகாரியாக மாறுவேன். ஒரு நாணயமான அதிகாரியாக நடந்து கௌரவத்தை நிலை நாட்டுவேன். ஜாதி மத பேதங்களில் நானும் சிக்காமல் மற்றவர்களையும் சிக்க விடாமல் அமைதியான வாழ்வுக்கு வழி வகுப்பேன். சமுதாயத்தின் முறைகேடுகளை நீக்க மனதால், வாக்கால், உடலால் உழைத்துப் பாடுபடுவேன். உடல் ஊனமுற்றோருக்கு மறுவாழ்வு அளிக்க என்னால் இயன்றதைச் செய்வேன். நாட்டின் முன்னேற்றத்தையும் சிறப்பினையும் நினைத்து நினைத்து மகிழ்ச்சி அடைவேன்.

டி. விஜயலட்சுமி (கீதா மெட்ரிகுலேஷன் பள்ளி),
எண்:19 கிருஷ்ண பிள்ளைத் தோட்டம்,
2வது தெரு, சைதை,
சென்னை-600 015, (தமிழ் நாடு).

# வாசகர்களுக்கானக் கதைப் போட்டி (ஜூன்)

## தேர்ந்தெடுக்கப் பட்ட சிறந்த கதை



கிராமத்து மக்கள் எளிமையானவர்களாகவும் அப்பாவிகளாகவும் இருந்ததனால், பூசாரியின் வார்த்தைகளை அப்படியே நம்பி, அவன் பட்டுத் துணிகளும் ஆபரணங்களும் புனைந்து பூஜை செய்வதற்காக அவனது சம்பளத்தை உயர்த்தினர்.

ஆனால் பூசாரியின் பேராசை இத்துடன் முற்றுப் பெறவில்லை. ஒரு மாதம் கழித்து அவன் மீண்டும் கிராம வாசிகளிடம் கடவுள் பூசாரியின் மனைவிக்கும் அதே போல் பட்டுத்துணிகளும் ஆபரணங்களும் வழங்குமாறு தன்னிடம் ஆணையிட்டதாகக் கூறினான். இந்த முறையும் பூசாரியின் விருப்பப்படி அவனுக்குப் பணம் தந்து உதவி செய்த போதிலும் கிராமவாசிகளுக்கு பூசாரி மேல் சந்தேகம் தோன்றியது. அந்த சந்தேகத்தைத் தீர்க்க, சில கிராமவாசிகள் ரகசியமாக பூசாரியின் வீட்டருகில் ஒரு இரவு மறைந்து நின்று பூசாரி தன் மனைவியிடம் பேசுவதை ஒட்டுக் கேட்டனர். பூசாரி தன் மனைவியிடம் ''இந்த கிராமத்து மக்கள் முட்டாள்கள். என்னுடைய வார்த்தைகளில் நம்பிக்கை வைத்து என்னுடைய சம்பளத்தை இரண்டு மடங்காக்கியது மட்டுமன்றி, இப்போது உனக்கும் தேவையான பட்டுத்துணிகளும் நகைகளும் தந்துள்ளனர்.'' என்று சொல்லிக் கொண்டிருந்ததை கேட்டு விட்டனர். உடனே பூசாரி கடவுளின் பெயரால் தங்களை இத்தனை நாள் ஏமாற்றியது தெரிய வந்தது. உடனே அவர்கள் ஒன்று கூடி தங்களுக்குள் ஆலோசித்து அந்தப் பூசாரியை மாற்ற முடிவு செய்தனர். இவ்வாறு தன் பேராசையால் பூசாரி தனக்கு ஒழுங்காக கிடைத்து வந்ததையும் இழந்தான்.

**இரா. நிவேதிதா** (8ம் வகுப்பு) த/பெ. வி.சங்கரன்,
ஈ-1, ஆறாவது குறுக்குத் தெரு, வளசரவாக்கம், சென்னை- 87. தமிழ்நாடு.

# நந்தன் கானன் அழைக்கிறது



நந்தன் கானன் என்றால் கடவுளின் நந்தவனம் என்று பொருள். உலகிலேயே மிக அபூர்வமான வெண்மை நிறப் புலிகள் நிறைந்த விலங்கியல் பூங்கா இதுதான். 45 ஆண்டுகளாக இயங்கி வரும் நந்தன்கானனில்தற்போது முப்பதுக்கும்அதிகமான வெண்புலிகள் உள்ளன. ஒரிஸ்ஸா மாநிலத்தின் தலைநகரான புவனேஸ்வரிலிருந்து 20 கி.மீ தொலைவில் இது அமைந்துள்ளது. உலகெங்கும் உள்ள விலங்கியல் பூங்காக்களிலுள்ள மொத்தம் ஐம்பதுக்கும் மேற்பட்ட வெண்புலிகளின் பிறந்த வீடு நந்தன் கானன் தான். தீபக், கங்கா ஆகிய புலிகளுக்கு முதன் முதலாக இங்கே 1980ஆம் ஆண்டில் மூன்று வெண்புலிக் குட்டிகள் பிறந்தன.

இவை வளர்ந்து பெரியனவாகி இவற்றுக்குப் பிறந்த பிற்கால வாரிசுகள் இந்தியாவிலுள்ள பல விலங்கியல் பூங்காக்களுக்கு அனுப்பப்பட்டுள்ளன. நந்தன் கானனில் வெண்புலிகளுக்காக மட்டும் 12 ஹெக்டேர் நிலப்பரப்பு ஒதுக்கப்பட்டுள்ளது. சண்டகா காட்டில் அமைந்துள்ள நந்தன் கானனில் காஞ்சியா என்ற மிகப் பெரிய 50 ஹெக்டேர் பரப்பளவுள்ள ஏரி ஒன்று உள்ளது. இந்தக் காட்டிலும் ஏரியிலும் 70 விதமான பாலூட்டும் விலங்குகளும், 20 விதமான ஊர்வன வகையைச் சேர்ந்த உயிரினங்களும் 80 விதமான பறவைகளும் வசிக்கின்றன. 620 மீட்டர் நீளமான கம்பி மூலம் செல்லும் ஆகாய ஊர்தியும் மிகப் புகழ் பெற்றது. நந்தன்கானனைப் பார்க்கும் போது பகவான் புத்தூர் கூறிய, ''தனக்கோ, தன் வளர்ச்சிக்கோ பிறரிடமிருந்து எதையும் எதிர்பாராமல் அதே சமயம் தன்னிடம் உள்ளவற்றை எல்லாம் பிறருக்கு வாரி வழங்கும் அன்பும் அருளும் ஒருங்கே நிறைந்த புனித ஜீவனே காடாகும்'' என்ற வாக்கு நினைவுக்கு வருகிறது.





# மாய மந்திரவாதி

## 12

*(துன்முகனின் கோட்டையைக் கைப்பற்றியிருந்த சூரியபூபதி மாயக்கரடி, உக்கிரதண்டன் ஆகியோர் மீது தனது வீரர்களை ஏவி விட்டான். திருடர் தலைவன் நாகமல்லன் அவனிடம் துன்முகனைத் தாங்கள் சிறைப்பிடித்து வந்துள்ளதாகத் தெரிவித்தான். சூரியபூபதி அருகில் வந்ததும், ஆத்திரம் கொண்ட துன்முகன் அவன் மேல் பாய, திடீரென சூரியபூபதி கோட்டையை நோக்கிப் பின் வாங்கினான். பிறகு...)*

**த**ன்னைத் துரத்தி வரும் துன்முகனை எதிர்த்துப் போரிடாமல், பூபதி கோட்டையை நோக்கி தன் குதிரை மீது அமர்ந்து பயந்து ஓடினான். தனது மன்னனே புறமுதுகிட்டு ஓடுவதைப் பார்த்த அவனுடைய சேனாதிபதியும் திரும்பி ஓட முயன்றான். அப்போது அவனுடைய வீரர்களில் இருவர், ''யசமான்! நம்மை எதிர்த்துப் போரிட வந்துள்ளவர்கள் பத்து பேருக்கு மேல் இல்லை. நமது மன்னனும் துன்முகனும் சண்டைபோட்டு சாகட்டும். இவர்களை நாம் அழித்து விடுவோம். அதன்பிறகு நீங்களே ராஜாவாகி விடலாம்'' என்றனர். உடனே சேனாதிபதிக்கு சிறிது சபலம் உண்டாக, மாயக்கரடியையும் உக்கிர தண்டனையும் தாக்க முற்பட்டான்.

இதற்குள் மாயக்கரடி தனது கோடாலியை உயர்த்தி, ''நண்பர்களே அசட்டுத் துணிச்சலுடன் துன்முகன் பூபதியுடன் சண்டையிட உள்ளே



கோட்டைக்குள் புகுந்து கோட்டை வாயிலை அடைத்து விடலாம் வாருங்கள்'' என்று கூவிக் கொண்டே தனது வீரர்களுடன் கோட்டையை நோக்கி ஓடி விட்டான்.

பின் வாங்கிய சேனாதிபதியையும் அவனது வீரர்களையும் துரத்திக் கொண்டே மாயக்கரடியும், மற்றவர் களும் தொடர்ந்தனர். சேனாதிபதியும் அவன் வீரர்களும் மிக விரைவாகத் தப்பியோடி கோட்டைக்குள் புகுந்து கதவை அடைத்து விட்டனர். கோட்டைக்குள் நுழைய முடியாத ஒரு சில வீரர்கள் ஆங்காங்கே சிதறி ஓடி விட்டனர்.

உக்கிரதண்டன் கோட்டைக் கதவுகளை முதலில் தனது கதையால் பலமாகத் தாக்கினான். ஆனால் கதவுகள் கொஞ்சம் கூட அசைய வில்லை. ''கரடியாரே! இந்தக் கதவு அசையவே இல்லை. என்ன செய்வது? உள்ளே துன்முகன் தனியே அவர்களிடம் சிக்கிக் கொண்டான். அவன் தலையை மந்திரவாதியிடம் கொண்டு வந்து தருவதாக இருந்த உன் கடமையில் இருந்து நீ தவறப் போகிறாயே என்று நினைத்தால் வருத்தமாக இருக்கிறது'' என்றான்.

இந்த வார்த்தைகளைக் கேட்டதும் மாயக்கரடியின் உடல் நடுங்கியது. தன் கடமையிலிருந்து தவறினால், வாழ்நாள் முழுதும் தான் கரடியாகவே இருக்க வேண்டியதுதான் என்று நினைத்துப் பார்க்கும் போது அதற்கு அச்சம் உண்டாயிற்று. கரடியாய் காட்டினில் வாழ்ந்து தேன்கூடு

சென்று விட்டான். நம்முடைய உதவியில்லாமல் அவர்களுடைய பெரிய படையால் சூழப்பட்டுத் தன் உயிரையும் இழக்கப் போகிறான். நாம் இவர்களைக் கொன்று குவித்து, துன்முகனைக் காப்பாற்றுவோம்'' என்று கூக்குரலிட்டது.

உக்கிரதண்டன் கல்லாலான தன் கதையை உயர்த்தி, ''பூபதியின் வீரர்களே! எச்சரிக்கை!! துன்முகனுக்கு ஏதாவது ஆபத்து நேர்ந்தால், உங்களை கூண்டோடு அழித்து விடுவோம்'' என்று கத்தினான்.

உக்கிரதண்டன், மாயக்கரடி ஆகியோரின் சீற்றத்தைக் கண்டதும், பூபதியின் சேனாதிபதி பயந்து போனான். ''இந்தக் கரடியையும் அரக்கனையும் நம்மால் எதிர்த்து சண்டையிட முடியாது. நாம் அனைவரும் திரும்பி ஓடிக்

எங்கே என்று தேடிக் கொண்டு வாழ்க்கையை காட்டில் கழிக்க வேண்டிய தன் நிலையை எண்ணிப் பார்த்து அதற்கு கோபமும் உண்டாயிற்று.

தனது முக்கியமான வேலை துன்முகனை அவன் எதிரிகளிட மிருந்து காப்பதுதான் என்று புரிந்து கொண்ட மாயக்கரடி தன் முழுப் பலத்தையும் கொண்டு கோடாலி யால் கோட்டைக் கதவுகளைத் தாக்கியது. ஆனால் கோட்டைக் கதவுகள் மிகவும் உறுதியாக இருந்ததால், கரடியின் கையிலிருந்து கோடாலி நழுவி விழுந்ததுதான் மிச்சம். கதவுகளுக்கு ஒன்றுமே ஆகவில்லை.

மாயக்கரடியின் கோடாலியும் பயனற்றுப் போனதைக் கண்ட வேட்டுவ வாலிபன் முன் வந்து, ''கரடியாரே உணர்ச்சிவசப்பட்டு தங்கள் கோடாலியை உடைத்து விடாதீர்கள். கதவு அசைகிறார்போல் தெரியவில்லை. எனக்கு ஒரு யோசனை தோன்றுகிறது. இந்தக் கதவுகளுக்குத் தீயிட்டு எரித்து விடலாம்'' என்றான்.

உடனே ''கரடி முட்டாள்! நீயும் உன்னுடைய யோசனையும்!!

நீ தீயிட்டு எரிப்பதற்கு முன் பூபதி துன்முகனைக் கொன்று விட்டால் என்ன செய்வது? இதைப் பற்றி கொஞ்சம் யோசி'' என்றது. ''ஆமாம், இது யோசிக்க வேண்டிய விஷயம் தான்'' என்று வேடனும் தலையைச் சொறிந்தான். இதற்குள் உக்கிர



தண்டன் தன் கதையை கையில் மீண்டும் எடுத்துக் கொண்டு மிக வேகமாக ஓடி வந்து கதையால் ஓங்கிக் கதவுகளை அடித்தான். உக்கிர தண்டனது மூர்க்கத்தனமான அடியினால், கதவுகளைச் சுற்றி இருந்த மதில் சுவர் கற்கள் இடிந்து விழுந்தன. தன்மீது கற்கள் விழுந்து விடுமோ என்று பயந்து உக்கிர தண்டன் பின் வாங்கினான். மற்றவர் களும் பின் வாங்கினர். இப்போதும் கதவுகள் அசையவில்லை.

மேற்கொண்டு என்ன செய்யலாம் என்று யோசித்தவர்களது கவனத்தை ஒரு அதிசயமான விஷயம் ஈர்த்தது. மதில் சுவர் மேல் திடீரென்று ஒரு பயங்கரமான கருங்குரங்கு எங்கிருந்தோ வந்து நின்று கொண்டு இருந்தது. அதன் கையில் ஒரு பெரிய நீளமான கரடியின் தலை போன்ற



உருவம் வைரத்தில் பதித்த மந்திரக் கோல் ஒன்று காணப்பட்டது. திடீரென்று காணப்பட்ட அந்தக் கருங்குரங்கினைப் பார்த்து மாயக் கரடி ''அட குரங்கே! நீ எங்கிருந்து வந்தாய்? நீ குரங்குதானா இல்லை ஏதாவது பேயா?'' என்று கேட்டது.

அதைக் கேட்ட குரங்கும், ''கரடி வேடதாரியே! நீ உண்மையில் கரடிதானா? இல்லை பேயா?'' என்று திருப்பிக் கேட்டது.

தன்னைப் பார்த்து இவ்வாறு கேட்டதும், கரடிக்கு மிகுந்த எரிச்சல் உண்டாக, குரங்கின் மீது தன் கோடாலியை வீசி எறிய முயன்றது. உக்கிரதண்டன் விரைந்து வந்து கரடி அவ்வாறு செய்யாமல் தடுத்து, ''கரடியாரே! அவசரப்பட்டு ஏதாவது விபரீதம் செய்து விடாதே. மந்திரவாதி ஏதோ ஆபத்தில் சிக்கியுள்ளார் என்று எனக்குத் தோன்றுகிறது. இந்தக் குரங்கை அதைப் பற்றிக் கேட்போம்'' என்றான். உடனே கரடி ''உக்கிர தண்டா! இந்தக் குரங்குடன் பேசிக் கொண்டிருப்பதில் என்ன லாபம்? அங்கே துன்முகன் இன்னும் உயிருடன் இருக்கிறானா என்று தெரியவில்லை. இந்தக் கோட்டைக் கதவை உடைக்க முடியாவிட்டால் மதில் சுவரையாவது உடைப்போம். வா'' என்றது.

''கரடியாரே! நீ பயனற்றதாக ஏதேதோ பேசுகிறாய். அந்தக் குரங்கின் கையிலுள்ள மந்திரக்கோல் யாருடையது தெரியுமா? அது மாயமந்திரவாதியுடையது. அந்த மந்திரக்கோல் இப்போது குரங்கின் கையில் உள்ளது என்றால் அதிலிருந்து நீ என்ன தெரிந்து கொள்கிறாய்? மாய மந்திரவாதிக்கே ஏதோ ஆபத்து என்று தோன்றுகிறது. இந்த சந்தர்ப்பத்தில் நாம் செய்ய வேண்டியது என்ன? நன்றாக யோசி. துன்முகனைப் பற்றிய கவலையை விடு. மந்திரவாதி இப்போது உயிருடன் இருக்கிறாரா என்றே சந்தேகம் உண்டாகிறது. நாம் இப்போது காட்டுக்குள் சென்று ஒளிந்து கொள்வதுதான் சரியான யோசனை'' என்றான் உக்கிரதண்டன்.

இதைக் கேட்டு கலவரமடைந்த நாகமல்லன் யானையிலிருந்து குதித்து ''கரடியாரே, உக்கிரதண்டன் சொல்வது சரியென்று தோன்றுகிறது. நாம் காட்டுக்குள் ஒளிந்து கொள் வோம். காட்டு வழியே செல்லும்

பயணிகளைக் கொள்ளையடித்து வாழ்க்கை நடத்துவோம்'' என்றான்.

உடனே கரடியும் முதல் முறையாகச் சற்று குழப்பம் அடைந்தது. ''நீங்கள் சொல்வதைப் பார்த்தால் எனக்கும் சந்தேகம் உண்டாகிறது. நான் மந்திரவாதி யையும் காளிவர்மனையும் தேடிச் செல்லலாம் என்று நினைக்கிறேன். வாருங்கள் போவோம்'' என்றது. நாகமல்லன் உடனே நானும் வருவதாகச் சொல்ல வேடனும் வருவதாகச் சொல்ல, அனைவரும் கரடியுடன் செல்லத் தயாராயினர். ஆனால் உக்கிரதண்டன் மட்டும் மௌனமாக இருந்தான். கரடி அவனை நோக்கி, ''உக்கிரதண்டா! நீ ஏன் பேசாமல் இருக்கிறாய்? மந்திர வாதியைப் பார்க்க வேண்டும் என்று சொன்னாயே!'' என்று கேட்டது.

''மந்திரவாதி உயிருடன் இருந் தால் அல்லவா பார்க்க முடியும்!'' என்று சந்தேகத்தைக் கிளப்பினான் உக்கிரதண்டன். இப்போது மதில் மேல் நின்றிருந்த கருங்குரங்கு ''இந்தக் கோட்டைக்குள் பெரிய போர் நடக்கிறது. பூபதியின் தரப்பில் எவ்வளவு வீரர்கள் இருக்கின்றனரோ அதே அளவு துன்முகனின் தரப்பிலும் அவனுடைய நாட்டு வீரர்கள் சேர்ந்து விட்டனர். இரண்டு படைகளுக்கும் கோட்டைக்குள் போர் நடக்கிறது,'' என்று கத்தியது. ஆகா, அப்படி யானால் துன்முகனுக்கு படைப்பலம் உள்ளது. அவ்வளவு சீக்கிரத்தில் பூபதியால் துன்முகனைக் கொல்ல



முடியாது. அப்படியெனில் துன் முகன் என் கையில் சிக்க இன்னும் வாய்ப்பு உள்ளது'' என்று கரடி மகிழ்ச்சியோடு கூறியது. அதைக் கேட்டுப் பொறுமையிழந்த உக்கிர தண்டன் தன் கதையினால் தரையை ஓங்கி அடித்து ''கரடியாரே சொன்னதையே திரும்ப திரும்ப சொல்கிறாயே! துன்முகனைப் பற்றி இப்போது எண்ணாதே. உன்னுடைய மந்திரவாதியைப் பற்றி நினை. அவர் உயிரோடு இருந்தால் அவரது மந்திரக் கோல் எப்படி இந்தக் குரங்கின் கைவசம் வந்தது?'' என்று கத்தி விட்டு கருங்குரங்கை நோக்கி, ''குரங்கே! மாய மந்திரவாதியின் மந்திரக்கோல் உனக்கு எப்படிக் கிடைத்தது? அவர் உயிரோடு இருக்கிறாரா இல்லை இறந்து விட்டாரா?'' என்று கேட்டான்.

''மந்திரவாதியைக் கொன்று விட்டேன், ஹாஹ்ஹாஹ்ஹா'' என்று அட்டகாசமாகச் சிரித்த குரங்கு ''அவரது உடலை காக்கைகளும் கழுகுகளும் சூழ்ந்துள்ளன. அவற்றைத் தின்னவிடாமல் காளி வர்மன் காவல் காக்கிறான்'' என்று கூத்தாடியது. பிறகு ''என் தொலை நோக்கால் இப்போது நடப்பதைக் கூறுகிறேன் கேள். அந்த மந்திரவாதி ஏதோ மாயம் செய்து மீண்டும் பிழைத்து விட்டான். அதோ ஓர் எருமையின் மீது ஏறி வருகிறான். அவன் பக்கத்தில் காளிவர்மனும் குதிரையில் வருகிறான். அவர்கள் இருவரும் இங்குதான் வருகிறார்கள். அவர்களைப் பிடிக்க பின்னால் சந்திரசீல மன்னன் ஜீதகேதுவும் அவன் வீரர்களும வருகின்றனர். இதோ, அவர்கள் இருவரையும் பிடித்துத் தலைகளை சீவப் போகின்றனர், பார்'' என்று கத்தியது.

உடனே மாயக்கரடி, ''ஏ குரங்கே! என்ன உளறுகிறாய்? உனக்குப் பைத்தியம் பிடித்து விட்டதா?'' என்று பதிலுக்குக் கத்தியது. ஆனால் அடுத்த சில கணங்களில் நடந்த நிகழ்ச்சி அங்கிருந்த அனைவரையும் அதிர்ச்சியில் திகைக்க வைத்தது. குரங்கு சொன்னது போலவே, ஓர் எருமையில் ஏறி சவாரி செய்து கொண்டு மாய மந்திரவாதியும், பக்கத்தில் ஒரு குதிரையில் ஏறி சவாரி செய்து கொண்டு காளிவர்மனும் அங்கு வந்து சேர்ந்தனர்.

மாய மந்திரவாதி கரடியை நோக்கி, ''கரடியே, என்னிடமிருந்த மந்திரக் கோலை இந்தக் கருங்குரங்கு திருடி விட்டது. இதை சும்மா விடக்கூடாது. இதைத் தேடிக் கொண்டு தான் நான் இங்கு வந்துள்ளேன். மந்திரக் கோலை என்னிடமிருந்து திருடிய இந்தக் குரங்கை உயிருடன் இனி விட்டு வைக்கக் கூடாது'' என்று சொல்லிக் கொணடே போனார்.

அடுத்தக் கணமே, கருங்குரங்கு 'கீச்' 'கீச்' என்று ஒலி எழுப்பிச் சிரித்து விட்டு மதில் சுவரிலிருந்து கோட்டை குள் குதித்து மறைந்து விட்டது.

*(தொடரும்)*





நவீன வேதாளக் கதை

# கோபக்கார முனிவர்

தன் முயற்சியில் சற்றும் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மேல் ஏறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின் கீழ் இறங்கி அவன் அதை சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்லுகையில் அதனுள் இருந்த வேதாளம் எள்ளி நகைத்து ''மன்னனே, இன்று வரை நீ எதை அடைவதற்காக இவ்வளவு பாடுபடுகிறாயோ, அதை நீ அடைந்ததாகத் தெரிய வில்லை. நீ அடைய விரும்பும் இலக்கு மிகக் கடினமானதாகத் தோன்றுகிறது. உன்னை இவ்வாறு கடும் முயற்சியில் ஈடுபடுத்தியவர் உன்னுடைய குருவாக இருக்கக் கூடும். அவருடைய வார்த்தைகளில் மிகுந்த நம்பிக்கை கொண்டு தொடர்ந்து நீ அல்லும் பகலும்



உழைக்கிறாய். ஆனால் சில சமயம் இந்த மகான்கள் தாங்கள் சொல்ல வேண்டியதைத் தெளிவாகச் சொல்லாமல், சங்கேதமாகச் சொல்லி விடுகிறார்கள். மிகுந்த புத்திசாலி களால்தான் அதைத் தெளிவாகப் புரிந்து கொள்ள முடியும். உதாரணத்திற்கு, ஒரு கோபக்கார முனிவரின் கதையை உனக்குக் கூறுகிறேன் கேள்'' என்று கதை சொல்லலாயிற்று:

பல ஆயிரம் ஆண்டுகளுக்கு முன், ஒரு காட்டில் சுதீவர் என்ற முனிவர் கடுந்தவம் செய்து வந்தார். அந்தப் பக்கம் வந்த இரு காட்டுவாசிகளில் ஒருவன் திடீரென மயக்கம் அடைந்து கீழே விழுந்து விட்டான். என்ன செய்வது என்று தெரியாமல் திகைத்த மற்றொருவன் தவத்திலிருந்த முனிவரை எழுப்பி உதவி கேட்டான். தன் தவம் கலைந்த கோபத்தினால் முனிவர்காட்டுவாசியை சாம்பலாகப் போகும்படி சபித்தார். அந்தக் கணமே அந்தக் காட்டுவாசி எரிந்து சாம்பலாக, மயக்கம் தெளிந்து எழுந்த மற்றொருவன் தனது சகாவின் நிலையைக் கண்டு கதறி அழுதான்.

இதற்குள் கோபம் தணிந்த முனிவரிடம் மற்றொரு ஆள் முனிவரை சாபத்தை நீக்குமாறு வேண்ட, சுதீவர் ''எனக்கு சாபம் கொடுக்கத் தெரியுமே தவிர சாபத்திலிருந்து மீட்கத் தெரியாது. நான் என் குரு சுசாந்தரிடம் அதைக் கற்று வருகிறேன். நீ அதுவரை உன் நண்பனின் சாம்பலை பத்திரமாகப் பாதுகாத்து வா'' என்று சொல்லி விட்டு தன் குருவைத் தேடிச் சென்றார்.

தன் குருவிடம் சென்று நடந்தவற்றை விளக்கி பரிகாரம் கேட்டார். குரு சுசாந்த முனிவர், ''மனிதனின் முதல் விரோதி அவனது கோபம்தான். நீ கொடுக்கும் சாபத்தினால் உன் தவவலிமை குறைந்து விடும். உன் தவவலிமை முழுதும் தியாகம் செய்தால் உன் சாபத்தைத் திரும்பப் பெறலாம்'' என்றார். அதற்கு இணங்காமல் வேறு யோசனை சொல்லும்படிக் கேட்டார். ''சுதீவா! விஷ்ணுபுரத்தில் மாதவன் என்ற புண்ணியாத்மா இருக்கிறான். அவன் இல்லறத்தில் இருப்பவன். அவனிடம் சென்று அவன் புண்ணியத்தில் ஒரு பகுதி தானமாகப் பெற்றுக் கொள். அதைக் கொண்டு

அந்தக் காட்டுவாசியை உயிர்ப் பிக்கலாம்'' என்றார்.

சுதீவர் அந்த மாதவனைத் தேடிச் சென்றார். செல்லும் வழியில் மிக அழகான ஒரு இளம் பெண் தென்பட்டாள். அவள் அழகிலே கிறங்கிப் போய் அவளையே உற்றுப் பார்க்க, அதனால் கோபமடைந்த அந்தப் பெண், ''முனிவரான நீ என் போன்ற பெண்ணை இப்படி உற்றுப் பார்க்கலாமா? உனக்கு வெட்கமாக இல்லை?'' என்று கேட்டதும், சுதீவருக்குக் கடுங்கோபம் உண்டாயிற்று.

''அடி பெண்ணே! உன் அழகினால் தானே உனக்கு இவ்வளவு கர்வம்? நீ அழகற்ற அவலட்சணமான பெண்ணாக மாறுவாய்'' என்று சபிக்க அந்தப் பெண்ணும் அவ்வாறே மாறிவிட்டாள். பிறகு சுதீவர் விஷ்ணு புரத்தை அடைந்தார். வழியில் ஒரு இளைஞனிடம் மாதவனது வீட்டுக்கு வழி கேட்டார். ஆனால் அவன் ''மாத வனுடைய பெண் மிக அழகானவள். அதனால்தான் அவன் வீட்டுக்கு வழி கேட்கிறாயா? உன்னைப் போன்ற முனிவருக்கு இது தேவையா?'' என்று திமிராகக் கேட்க, அவனை ஊமையாக வேண்டும் என்று சுதீவர் சபித்துவிட்டு ஒருவாறு மாதவனின் வீட்டைக் கண்டு பிடித்தார். சுதீவரை மாதவன் வரவேற்று அமரச் செய்தார். சுதீவர் மாதவனிடம், ''என் குரு சுசாந்தர் தங்களை ஒரு புண்ணியவான் என்றார் என்று தொடங்கி நீங்கள் அப்படி என்ன தவம் செய்து என் குருவே புகழும்படி புண்ணியம் சம்பாதித்தீர்கள்?'' என்று கேட்டார்.





அதற்கு மாதவன், காலையில் எழுந்து என் நித்திய கடன்களை முடித்து விட்டு, வீட்டு வேலைகளிலும் வெளி வேலைகளிலும் பங்கேற்கிறேன். எல்லாருக்கும் என்னாலான உதவிகளைச் செய்கிறேன். கோபம், பொறாமை, ஆசை இவற்றை விட்டொழித்து மனதினாலும், வாக்கினாலும், உடலினாலும் பலருக்கும் நன்மை புரிகிறேன்'' என்றார்.

பூஜை, புனஸ்காரம், தவம் இவை எதுவுமே செய்யாமல் இவனுக்கு எப்படி புண்ணியம் கிடைக்கும் என்ற எண்ணத்துடன் சுதீவர் ''நீங்கள் கடவுளை தியானம் செய்வது கிடையாதா?'' என்றார்.

''கடவுள் என்னிலும் இருக்கிறார். மற்றவர்களிடமும் இருக்கிறார். சகல உயிர்களிலும் உறைகிறார். அவரைத் தனியாக பூஜையோ, தியானமோ ஏன் செய்ய வேண்டும்? மற்றவர்களுக்கு உதவி செய்தாலே, அது கடவுளுக்காக செய்யப்படும் பூஜை, தியானம், தவம் அனைத்தும் ஆகும்'' என்றார் மாதவன். சுதீவருக்கு மாதவன் தன்னை ஏளனம் செய்கிறார் எனத் தோன்றியது. ''நீர் நான் செய்யும் தவமெல்லாம் வீண் வேலை என்று பொருள்படக் கூறுகிறீரா?'' என்று கோபத்துடன் சுதீவர் கேட்டார்.

மாதவன் பணிவுடன், ''சுவாமி, நான் உங்களைப் பற்றியோ, உங்கள் தவத்தைப் பற்றியோ குறை கூறவில்லை. நான் என்னுடைய கருத்தைக் கூறுகிறேன்'' என்றார்.

கோபத்துடன் குதித்து எழுந்தார் சுதீவர். ''உன்னைப் போன்ற நாஸ்திகனை மன்னிக்கவே கூடாது இந்த நிமிடத்திலிருந்து நீ கண் பார்வை இழந்து நடக்க முடியாமல் நோயாளியாக படுக்கையில் வீழ்வாய்'' என்று சாபமிட்டார்.

ஆனால் மாதவனுக்கு ஒன்றுமே ஆகவில்லை. மீண்டும் மாதவன் பணிவுடன், ''சுவாமி, சாந்தம் அடையுங்கள். உங்களைப் போன்ற மகான் கோபம் அடையும்படி நான் பேசியது தவறுதான்'' என்று மன்னிப்புக் கேட்டார்.

சுதீவர் ஆச்சரியத்துடன் ''மாதவா, என் சாபம் உனக்குப் பலிக்கவில்லை. நீ என்ன மகாத்மாவா?'' என்றார் சுதீவர்.

''சுவாமி, அப்படியில்லை. காட்டுவாசி, அழகான இளம்பெண்,

வழியில் கண்ட இளைஞன் ஆகியோருக்கு சாபம் கொடுத்து தங்கள் தவவலிமை நஷ்டமாகி விட்டது. நான் மட்டுமில்லை இனி நீங்கள் யாருக்கு சாபம் கொடுத்தாலும் அது பலிக்காது. போகட்டும் நீங்கள் என்னிடம் பெற வந்த புண்ணியத்தின் ஒரு பகுதியை உங்களுக்கு இப்போது நான் அளிக்கிறேன். அந்தப் புண்ணியத்தினால் நீங்கள் சாபமிட்டவர்கள் எல்லாருக்கும் இந்தக் கணத்திலிருந்து சாபம் நீங்கிவிடும். உங்கள் தவ வலிமையை இந்த வினாடியிலிருந்து நீங்கள் மீண்டும் பெற்று விட்டீர்கள். நீங்கள் விரும்பினால் இப்போது எனக்கு சாபம் கொடுக்கலாம். அது பலிக்கும்'' என்றார்.

தனது செய்கைகளினால் அவமானம் அடைந்த சுதீவர் மாதவனுக்கு நன்றி கூறிவிட்டு மௌனமாக தன் குருவைத் தேடிச் சென்றார். வரும் வழியில் தான் சாபமிட்டவர்கள் மறுபடியும் தன் நிலைக்கு மாறி இருப்பதை அவர் கண்டார். தனது குரு சுசாந்தரிடம் நடந்தவற்றைக் கூறி அதற்கு விளக்கம் கேட்டார். சுசாந்தர் புன்னகையுடன், ''தவத்தினால் பல சக்திகளை அடையலாம். ஆனால் தன் கடமையைச்சிறப்பாக செய்பவனும், பிறருக்கு உதவி செய்வதையே லட்சியமாகக் கொண்டவனுமான ஒரு மனிதன் ஒரு தவயோகியை விட அதிகப் புண்ணியம் செய்தவன் ஆகிறான்'' என்றார்.



''குருவே! இப்போது மாதவன் தான் செய்த புண்ணியத்தை தானம் செய்து விட்டான். ஆகையால் அவனுடைய சக்தியும் குறைந்து விடும் அல்லவா?'' என்று சுதீவர் சந்தேகம் கேட்டார்.

''மற்றவர்களுக்காகத் தன் புண்ணியத்தையே தானம் செய்தால் அதுவே பெரிய புண்ணியம். மாதவனின் சக்தி குறையவில்லை. முன்னைவிட இப்போது அதிகமாகி விட்டது'' என்றார் சுசாந்த முனிவர்.

''குருவே, முன்னை விட என் தவ வலிமையை அதிகமாக்குவேன். நான் மீண்டும் காட்டுக்குத் தவம் புரியச் செல்கிறேன்'' என்று கூறி சுதீவர் விடை பெற்றார்.

வேதாளம் கதை கூறி முடித்ததும் விக்கிரமனை நோக்கி, ''விக்கிரமா! தவம் செய்து சக்தியை அடைவதை

விட, மற்றவர்களுக்கு உதவி செய்தும், தன் கடமையை சரிவரச் செய்தும், அதிகமான புண்ணியத் தையும் பயனையும் அடைய முடியும் என்பதை சுசாந்த முனிவர் தனது வார்த்தைகளால் சுதீவருக்கு சங்கேதமாக உணர்த்தினார். இதை அவர் தானே புரிந்து கொள்ளட்டும் என்றே அவரை மாதவனிடமும் அனுப்பி வைத்தார். தியானம், தவம் எதுவும் செய்யாத மாதவனிடம் தன்னைக் காட்டிலும் அபூர்வ சக்திகள் இருப்பதை சுதீவர் கண் கூடாகப் பார்த்தார். இவற்றைஎல்லாம் பார்த்தும், அறிந்தும் சுதீவர் மீண்டும் ஏன் தவம் இயற்ற முடிவு செய்தார்? அவருடைய குரு சுதீவரிடம் தவம் புரிவதைவிட மாதவனைப்போல் புண்ணியவானாக இரு என்று ஏன் தெளிவாகக் கூறவில்லை? இதற் கெல்லாம் விடை தெரிந்தும் நீ மௌனமாக இருந்தால் உன் தலை வெடித்து சுக்கு நூறாகும்'' என்றது.

வேதாளத்தின் கேள்விகளுக்கு பதிலாக விக்கிரமன், சுதீவர் மிகவும் கோபம் கொள்வதால் அவரால் சரியான முறையில் தவம்கூட செய்ய இயலாது. மாதவனிடம் சுதீவர் நடந்து கொண்ட முறையைக் கேட்டபின் சுதீவரை குடும்ப வாழ்க்கையில் ஈடுபடச் செய்யவும் இயலவில்லை. அதற்காக சுசாந்தர் சுதீவரது குறைகளை எடுத்துக்காட்டி தனக்குத் தகுதியானதை தேர்வு செய்யும் பொறுப்பை சுதீவரிடமே விட்டு விட்டார். சுதீவர் சிறந்த தவயோகி. அவருடைய ஒரே ஒரு குறை அவரது முன் கோபம்தான். தன்னுடைய அனுபவங்களுக்குப் பிறகு தனது கோபத்தை மட்டும் தவிர்த்து விட்டால் தான் மிகச் சிறந்த தவயோகி ஆகலாம் என்ற உண்மை சுதீவருக்கு உறுதியாகத் தெரிந்தது. ஆகவே தான் அவர் மீண்டும் தவம் ஏற்றச் சென்றார்'' என்றான்.

விக்கிரமனது இந்த சரியான பதிலால் அவனுடைய மௌனம் கலையவே, அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் மீண்டும் முருங்கை மரம் ஏறிக் கொண்டது.



# வாசகர்களுக்கானக் கதைப் போட்டி

## சிறந்த படைப்பிற்குப் பரிசு ரூ250.

**கீழ்க்காணும் கதையைப் படியுங்கள்:**



பல துணிகரமானத் திருட்டுகளைப் புரிந்த ஒரு பக்காத் திருடனை ஒருநாள் ஒரு காவல்காரன் கையும் களவுமாகப் பிடித்து விட்டான். அந்தக் காவல் வீரனைப் பாராட்டி மன்னர் அவனுக்கு ஒரு தங்க மோதிரம் பரிசளித்தார். சில நாட்களுக்குப் பிறகு சாலையில் ஒரு போக்கிரி ஒரு சிறுவனிடமிருந்து கழுத்துச் சங்கிலியைப் பறிக்க முயற்சிக்கையில் அதைப் பார்த்து விட்ட ஓர் ஓய்வு பெற்ற ஆசிரியர் உடனே 'திருடன், திருடன்!' என்று கூவி பலரைத் திரட்டி அவனைப் பிடிக்க உதவினார். ஆசிரியரது செயலைப் பாராட்டி மன்னர் அவருக்கு ஒரு வைரமாலை பரிசளித்தார்.

மறுநாள் சபையில் கூடியிருந்த சான்றோர்களில் ஒருவர் மன்னரிடம், ''மகாராஜா, பயங்கரமான திருடனைப் பிடித்த காவல்காரனுக்கு வைர மோதிரம் பரிசளித்தீர்கள். ஆனால் ஒரு சாதாரணப் போக்கிரியைப் பிடிக்க உதவி மட்டுமே புரிந்த ஆசிரியருக்கு வைரமாலை பரிசளித்தீர்கள். ஏன் இந்த பாகுபாடு?'' என்று வினவினார்.

அதற்கு மன்னர் என்ன விடை அளித்திருப்பார்?

♦ காவல்காரனுக்கும் ஆசிரியருக்கும் பரிசளித்ததில் மன்னர் உண்மையிலேயே பாகுபாடு காட்டினாரா?

♦ பயங்கரத் திருடனுக்கும் சாதாரணப் போக்கிரிக்கும் பாகுபாடு காட்டினாரா?

உங்கள் விளக்கங்களை 100-150 வார்த்தைகளில் எழுதி ஒரு உறைக்குள் வைத்து அதன் மீது கதைப் போட்டி என எழுதி கீழ்க்காணும் கூப்பனையும் சேர்த்து அனுப்பவும்.

## முடிவு தேதி : நவம்பர் 30, 2004

பெயர் ---------------------------------வயது-----------பிறந்த தேதி----------------

பள்ளியின் பெயர் -----------------------------------------------------------------

வகுப்பு---------------------------வீட்டு முகவரி-------------------------------

---------------------------------------------------------------------------------

------------------------------------------------------------பின்கோடு-------------------

பெற்றோர் கையொப்பம் கலந்து கொள்வோரின் கையொப்பம்

**சந்தமாமா இந்தியா லிமிடெட்**

**82, டிஃபன்ஸ் ஆஃபீசர்ஸ் காலனி, ஈக்காட்டுத்தாங்கல் சென்னை-600 097.**

## அயல் நாட்டுக் கதைகள் (பிரான்ஸ்)

# ஏழாவது நாள்

சுமார் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் நடந்த கதை இது. பிரான்ஸ் நாட்டு பிரிட்டனி என்ற சிறிய நகரத்தின் எல்லையில் மலைக் குன்றுகளும் அதற்கு அப்பால் கடலும் இருந்தன. கடலோரத்தில் பல பாறைகள் கடல் நீரில் ஒரு பகுதி அமிழ்ந்து மறுபகுதி நீர் மட்டத்திற்கு வெளியே இருந்தன. சில சமயங்களில் புயலினால் கடல் கொந்தளிக்கையில் சில கப்பல்கள் காற்றின் வேகத்தினால் கரையோரம் தள்ளப்பட்டு பாறைகளில் மோதிக் கவிழ்ந்ததும் உண்டு.

அந்த மலைக் குன்றுகள் ஒன்றின் மீது அழகான மாளிகை ஒன்று இருந்தது. அந்த மாளிகையில் ஜன்னல் ஓரம் அமர்ந்து டோரிசன் என்ற இளம் பெண் தன் எதிரில் அலை வீசி ஆராவாரம் செய்யும் கடலை பல மணி நேரங்கள் தொடர்ந்து பார்த்துக் கொண்டே இருப்பதுண்டு. அவள் இவ்வாறு கடலையேப் பார்த்துக் கொண்டு இருந்ததற்கு ஒரு காரணம் இருந்தது.

அவளுடைய கணவன் ஆர்பர் தொலைவிலிருந்த ஒரு தீவுக்குத் தன் பாய்மரக் கப்பலில் பயணம் சென்றிருந்தான். அவன் திரும்பி வரும்போது கடலிலுள்ள பாறைகளின் மீது மோதி அவன் கப்பல் மூழ்கிவிடக்கூடாதே என்ற கவலை அவளை வாட்டியது. கணவன் திரும்பிவர ஓர் ஆண்டு பிடிக்கும் என்று அறிந்த அவளுக்கு, இரண்டு ஆண்டுகள் ஆகியும் அவன் திரும்பி வராதது மிகுந்த மனக் கவலையை அளித்தது. ஆர்பர் ஏதாவது விபத்துக்கு உள்ளாகி கடலில் மூழ்கி இறந்திருப்பான் என்றே மற்றவர்கள் கருதினர். ஆனால் டோரிசன் மட்டும் தன் கணவன் ஒரு நாள் கட்டாயம்



திரும்பி வருவான் என்ற ஆழ்ந்த நம்பிக்கையோடு இருந்தாள். அதே நகரத்தில் இருந்த ஆரிலியஸ் என்ற பணக்கார இளைஞன் டோரிசனை திருமணம் செய்து கொள்ள பல ஆண்டுகளுக்கு முன்னரே பெரிதும் ஆசைப்பட்டான். ஆனால் டோரிசன் அவனை மணக்காமல் ஆர்பரை மணந்து கொண்டாள். இப்போது கடல் பயணத்தில் சென்றிருந்த ஆர்பர் இரண்டு ஆண்டுகளாகத் திரும்பி வராததால், ஆரிலியஸ் மீண்டும் டோரிசனை அணுகி அவளை இப்போதும் திருமணம் செய்து கொள்ளத் தயாராக இருப்பதாகக் கூறி வற்புறுத்தினான்.

டோரிசனுக்கு ஆரிலியஸைக் கொஞ்சமும் பிடிக்கவில்லை. ஆனால் ஆரிலியஸ் நகரின் முக்கிய மான புள்ளி ஆதலால் அவனிடம் கடுமையாகவும் நடந்து கொள்ள முடியவில்லை. ஒருநாள் வழக்கப் படி ஆரிலியஸ் டோரிசனை அணுகி, ''டோரிசன் உன்னை திருமணம் புரிய நான் எதுவும் செய்யத் தயாராக உள்ளேன். நீ என்ன விரும்பினாலும் சொல். அதை நான் செய்வேன்'' என்று சூளுரைத்தான். அடிக்கடி இவ்வாறு தொந்தரவு செய்யும் அவனைத் தன் பாதையிலிருந்து விலக்க, செய்ய முடியாத ஒரு வேலையை அவனுக்குக் கொடுக்க டோரிசன் நினைத்தாள்.

''ஆரிலியஸ், அதோ கடலோரம் தெரியும் அனைத்துப் பாறை களையும் கடலிலிருந்து அகற்றி



விடுவாயா?'' என்று சவால் விட்டாள். ''ஓ, செய்வேன். நான் செய்து முடித்த ஏழு நாட்களுக்குள் என்னை நீ திருமணம் செய்து கொள்ள வேண்டும்'' என்றான். டோரிசனும் அந்த நிபந்தனைக்கு சம்மதித்தாள்.

''டோரிசன் நீ கொடுத்த வாக் குறுதியிலிருந்து தவறினால், நீயும் உன் குடும்பத்தினரும் நரகத்துக்குச் செல்வீர்கள். ஞாபகமிருக்கட்டும்'' என்று அந்தப் பகுதியில் நிலவி வரும் ஒரு நம்பிக்கையை அவளுக்கு ஞாபகப் படுத்தி விட்டுச் சென்றான்.

ஆரிலியஸுடைய நண்பர்களில் ஒருவன் மாய மந்திர வித்தைகளில் தேர்ந்தவன். அவனை சந்தித்து, தான் ஏற்றுக் கொண்ட சவாலை விளக்கிக் கூறி அவனை தனது ஊருக்கு அழைத்து வந்தான். கடலிலுள்ள பாறைகளைப் பார்வையிட்ட அந்த மந்திரவாதி நண்பன் ''இவற்றை



உண்மையாக அகற்றுவது முடியாத செயல். ஆனால் என்னுடைய மந்திர சக்தியால் ஏழு நாட்களுக்கு இவை மறைந்து போகும்படிச் செய்ய என்னால் முடியும் போதுமா?'' என்றான். ''பிரமாதம். ஒரு வாரம் இந்தப் பாறைகள் மறைந்து போனால் போதும்'' என்று ஆரிலியஸ் மகிழ்ச்சி யுடன் கூவினான். மந்திரவாதி மாயத்தால் பாறைகள் மறைந்து போகச் செய்தான்.

அதைக் கண்ட ஆரிலியஸ் மிகுந்த மகிழ்ச்சியுடன் டோரிசனைத் தேடிப் போனான். ஆனால் டோரிசன் வீட்டில் அவன் கண்ட காட்சி அவனைத் திகைக்க வைத்தது. டோரிசனின் கணவன் ஆர்பர் திரும்பி வந்திருந்தான். நடந்த விஷயத்தைத் தன் மனைவியிடமிருந்து அறிந் திருந்த ஆர்பர், ''ஆரிலியஸ், கடலில் உள்ள பாறைகளை அகற்றுவதாக டோரிசனிடம் சவால் விட்டுச் சென்றாயாமே! நல்ல தமாஷ்'' என்று கேலி செய்தான்.

''தமாஷ் இல்லை, அதோபார்'' என்று ஆரிலியஸ் ஆர்பருக்கும் டோரிசனுக்கும் சுட்டிக்காட்டினான். என்ன அதிசயம் பாறைகள் மாயமாக மறைந்திருந்தன. ''டோரிசன், நீ சொன்னபடி நான் செய்து விட்டேன். இப்போது நீ வாக்களித்தபடி என்னைத் திருமணம் செய்து கொள்'' என்று உற்சாகத்துடன் ஆரிலியஸ் கொக்கரித்தான்.

டோரிசனும் ஆர்பரும் மிகுந்த அதிர்ச்சி அடைந்தனர். சில நிமிடங் களுக்குப் பிறகு தன்னைத்தானே தேற்றிக் கொண்ட ஆர்பர் ''டோரிசன், நீ வாக்களித்தபடியே, ஆரிலியஸை மணந்து கொள்ள வேண்டியதுதான். வேறு வழியில்லை. இல்லை யெனில் நாமெல்லாம் கொடுத்த வாக்கை மீறியதற்காக நரகத்திற்குச் செல்ல நேரிடும்'' என்றான் ஆர்பர்.

சிறிது நேரம் கல்லாய் சமைந் திருந்த டோரிசன் பிறகு, ''ஆரிலியஸ், நீ எடுத்த காரியத்தை முடித்து ஏழு நாட்களுக்குள் திருமணம் நடப்பதாகத்தான் உடன் பாடு இருக்கிறது. ஆகையால் நீ ஏழு நாட்கள் பொறுத்திரு. சரியாக ஏழாவது நாள் உன் விருப்பம் நிறைவேறும்'' என்றாள்.

ஆரிலியஸ் யோசித்தான். ஏழாவது நாள் இவளைத் திருமணம் செய்து கொண்டு, இந்த ஊரைவிட்டே போய் விடலாம். மந்திரம் விலகி பாறைகள் தெரிவதற்குமுன், தானும் டோரி சனும் வெகு தொலைவில் சென்று விடுவோம். இங்கு நடப்பதைப் பற்றியே அவளுக்குத் தெரியாது என்று எண்ணி, தன் சம்மதத்தைத் தெரிவித்தான்.

ஆனால் ஆரிலியஸ் எதிர்பாராதது நடந்தது. சரியாக ஏழாவது நாள் பிரிட்டனி நகரத்தில் பயங்கரப் புயல் அடித்து பேய் மழை கொட்டியது. சாலைகளில் மரங்கள் குறுக்கே விழுந்தன. பல வீடுகள் நாசமாயின. மக்களால் வீட்டை விட்டு வெளியே வரவே இயலவில்லை. திருமணம் நடத்த பாதிரியாரும் கிடைக்க வில்லை. பக்கத்திலுள்ள நகரத்திற்குச் சென்று மணம் புரியலாம் என்று குதிரை வண்டியில் கிளம்பிய ஆரிலியஸின் குதிரை வண்டி ஓர் அங்குலம் கூட நகர முடியவில்லை. பேய்க்காற்றில் வண்டி கவிழ, குதிரை தறிகெட்டு ஓடி விட்டது.

எட்டாவது நாள் வானம் தெளிவாகியது. புயல், மழை ஆகியவை சுத்தமாய் நின்றுவிட்டன. டோரிசன் ஆரிலியஸுடன் நடக்க இருக்கும் தன் திருமணத்திற்காக ஆர்பருடன் தேவாலயம் செல்லத் தயாரானாள். தான் வாக்களித்தபடியே திருமணத்திற்குத் தயாராக வந்திருந்த டோரிசனைக் கண்டதும் குற்ற உணர்வு அவனை வாட்டியது. அப்போது திடீரென அந்தக் காட்சி கடலில் தென்பட்டது. ஆம், ஒரு வாரமாக மறைந்திருந்த பாறைகள் மீண்டும் தென்பட்டன. அதைக் கண்ட அதிர்ச்சியில் ஆரிலியஸுக்கு மயக்கமே வந்து விட்டது. உடனே ஆர்பர், டோரிசன் இருவரிடமும் மன்னிப்புக் கேட்டுக் கொண்டு அவமானம் தாங்காமல், ஆரிலியஸ் ஊரை விட்டே ஓடி விட்டான்.



# செய்திச்சுடர்

## பாடப்புத்தகத்தில் சச்சின் டெண்டுல்கர்

**தி**ல்லியிலுள்ள அரசு உயர்நிலைப் பள்ளிகளில் இந்த ஆண்டிலிருந்து 10 முதல் 12ஆம் வகுப்புப் பாடப் புத்தகத்தில் சச்சின் டெண்டுல்கரைப் பற்றிய ஒரு வரலாற்றுக் கட்டுரை இடம் பெறுகிறது. சச்சின் பேட்டி அளிப்பது போல் அமைக்கப் பட்டுள்ள இந்தப் பாடத்தில், சச்சின் தன் வாழ்க்கையின் முக்கியமான அம்சங் களைப் பற்றி மனம் திறந்து பேசுகிறார். அவருடைய வெற்றிக்குக் காரணம் கேட்டு எழுப்பப்பட்ட கேள்விக்கு தன்னுடைய தீவிர ஆர்வம், இடை விடாத பயிற்சி, விரைவில் கற்றுக் கொள்ளும் திறமை போன்றவையே என்று சொல்லியுள்ளார்.



## அதிக உயரமான குப்பை மேடு

**எ**வரெஸ்ட் சிகரம் உலகிலேயே மிக உயரமானது என்ற பெயர் பெற்றுள்ளது. ஆனால் உயரமான சிகரம் என்ற சிறப்பினை இழந்து, உயரமான குப்பை மேடு என்ற பெயரை பெற்று விடும் அபாயம் இன்னும் 10 ஆண்டுகளில் ஏற்படலாம் என்று எவரெஸ்ட் சிகரத்தில் முதன் முதலாக ஏறிய டென்சிங் நார்கேயின் மகன் ஜாம்லிங் நார்கே கூறுகிறார். ஒவ்வொரு முறையும் மலையேறும் பல குழுக்கள் அங்கே பலவிதமான பொருட்களை வாரி இறைத்து அசுத்தப் படுத்து கின்றனர். 200 ச.அடி பரப்பளவு உள்ள அந்த சிகரத்தின் உச்சி இன்று காணுமிடமெல்லாம் கூடாரத் துணிகள், பிளாஸ்டிக் கோப்பைகள், பைகள், காலி பாட்டில்கள் ஆகிய குப்பைகளால் நிறைந்துள்ளன. இனி மலையேறும் குழுவினரை, யாராவது சோதனை செய்து வெறுங்கையுடன் உயரே அனுப்பினால் நன்றாக இருக்கும்.



# குழந்தைகள் பக்கங்கள்



# மணியின் கதை வனம்

ஒரு காட்டில் மணி என்ற பெயர் கொண்ட ஒரு முயல் வசித்து வந்தது. மணி மிக அழகாக கதை சொல்லும் ஆற்றல் படைத்தது. மரத்தடியில் அமர்ந்து மணி சொல்லும் கதைகளைக் கேட்பதற்காக மற்ற மிருகங்களின் கூட்டம் அலை மோதி நிற்கும்.

இப்போதெல்லாம் அந்தக் காட்டுக்கு ராஜாவான சிங்கத்தின் சபையில் மிருகங்கள் கூட்டம் குறைந்து விட்டது. எல்லா மிருகங்களும் சபைக்குப் போகாமல் அந்த நேரத்தில் முயலிடம் வந்து கதை கேட்க ஆரம்பித்தன. ஆனால் நரிகளும், ஓநாய்களும் மணியின் மீது பொறாமை கொண்டிருந்ததால் அவை மட்டும் கதை கேட்க வருவதில்லை.

ஒருநாள் சிங்கம் காட்டில் உலாவிக் கொண்டிருந்த போது மரத்தடியில் மணி கதை சொல்ல மற்றவை கேட்டுக் கொண்டிருந்ததைப் பார்த்து விட்டது. தன் சபைக்கு மிருகங்கள் ஏன் வருவதில்லை என்று சிங்கத்திற்குப் புரிந்து விட்டது. ஆனால் அருகில் செல்வதற்குள் முயலும் மற்ற மிருகங்களும் சென்று விட்டன. ஒரே





ஒரு பறவை மட்டும் அங்கே தென்பட்டது. அதனிடம் சிங்கம் பேசியதில் தான் சந்தேகப்பட்டது சரியெனப் புரிந்தது. மணி மீது கோபம் கொண்ட சிங்கம் நரிகளிடமும் ஓநாய்களிடமும் கலந்து ஆலோசித்து மணியைக் கொல்ல முடிவு செய்தது.

சிங்கம் ஒரு சன்னியாசியைப் போல் வேடம் தரித்து மரத்தடியில் அமர்ந்து தான் முயலை ஆசீர்வதிக்க விரும்புவதாகவும் அதை உடனே தன்னைக் காண வருமாறும் செய்தி அனுப்பியது. அந்தச் செய்தியை கேட்ட மணி சன்னியாசியை தரிசிக்கத் தயாரானது. ஆனால் சிங்கம் பார்த்து பேசிய அதே பறவை அந்த சமயம் மணியிடம் வந்து அதனுடைய உயிருக்கு அபாயம் என்று எச்சரித்தது. அதே சமயம் ஓர் ஓநாய் மணியை சன்னியாசியிடம் கூட்டிச் செல்ல வந்தது. அன்று இருட்டிவிட்ட தாகவும் மறுநாள் வருவ தாகவும் மணி சொல்லி அனுப்பி விட்டது.

அன்றிரவே முயலும் அதன் கதை கேட்கும் நண்பர்களும் அந்தக் காட்டை விட்டுவிட்டு பக்கத்திலிருந்த காட்டை அடைந்து விட்டன. இந்தப் புதியக் காட்டுக்கு ராஜாவாக மணி தேர்ந்தெடுக்கப் பட்டு அந்தக் காடு மணிப்புரி ராஜ்ஜியம் என்று அழைக்கப் பட்டது.



ஸ்னிக்தா படேல்
நவி மும்பை







சயான் சந்தா
கொல்கத்தா

சில வருடங்கள் கழிந்தன. மணிக்கு ராமு, சோமு என்று இரண்டு பிள்ளைகள் பிறந்தன. அவர்களிடம் மணி பழைய காட்டில் சிங்கம் எவ்வாறு அதைக் கொல்லத் திட்ட மிட்டது என்றும், தான் நண்பர்களுடன் காட்டை விட்டு ஓடிய கதையையும் சொன்னது.

ஒருநாள் மணிப்புரி காட்டில் ராமு, சோமுவுடன் விளையாட ஒரு சிங்கக் குட்டி வந்தது. அதைப் பற்றி மணியிடம் கூறிய ராமுவும் சோமுவும் அந்த சிங்கக் குட்டி பக்கத்துக் காட்டு சிங்கராஜாவின் பிள்ளைதான் என்றும், அதனால் மீண்டும் அபாயம் வருமா என்றும் கேட்டன. அந்த சிங்கம் பழைய விஷயங்களை மறந்திருக்கும் ஆகையால் அபாயம் இல்லை என்று மணி கூறியது. அதன்பிறகு ராமுவும், சோமுவும் சிங்கக் குட்டியின் நண்பர்கள் ஆகிவிட்டன.

ஆனால் தன் குட்டியின் மூலம் விஷயம் அறிந்த சிங்கராஜா மணியை மீண்டும் கொல்ல முயன்று, மணிப்புரிக்கே வந்து விட்டது. சிங்கக் குட்டிக்குத் தன் தந்தையின் செயல் பிடிக்கவில்லை. அதனால் கோபமடைந்து வீட்டுக்கு வர மறுத்து ராமு சோமுவுடனே தங்கி விட்டது.

ஆனால் தன் குட்டியை விட்டுப் பிரிந்து இருக்க முடியாத சிங்கராஜா தன் பழைய விரோதத்தை மறந்தது. அதுவே ஒரு நாள் மணியைத் தேடி வந்து, ''மணி, நடந்தவற்றை மறந்துவிடு. இனிமேல் நாம் இருவரும் நண்பர்களாக இருப்போம். நானும் உன்னிடம் இனி கதை கேட்க வருகிறேன்'' என்று கெஞ்சியது. மணியும் அதற்கு சம்மதிக்க, மணியும் சிங்கமும் நண்பர்களாயின.

*அதிகாரி (தொலைபேசி மூலமாக) :* என்னுடைய அலுவலகத்திற்கு மதிய உணவு அனுப்புங்கள்.
*விடுதி நிர்வாகி :* அடடா, அலுவலகத்திற்கு எங்களால் அனுப்ப முடியாது.
*அதிகாரி :* ஏன்?
*விடுதி நிர்வாகி :* நாங்கள் வீடுகளுக்கு மட்டுமே உணவு அனுப்புவது வழக்கம்.

***ஆர். ராகவேந்திரன்(12), சென்னை.***






*நீதிபதி :* பத்து நாள் சிறைவாசம் அல்லது ஐயாயிரம் ரூபாய். எது வேண்டும்.
*குற்றம் சாட்டப்பட்டவன் :* ஆகா, பிரமாதம்! எனக்கு ஐயாயிரம் ரூபாய் கொடுங்கள், போதும்.

***சிசில் டிகுரூஸ்(10), மும்பை.***

# நல்ல மாற்றம்


நந்திதா மேனன்
தில்லி

"சங்கர், இன்று இரவு உனக்காக என்ன சமையல் செய்யட்டும்?'' என்று கேட்டாள் சங்கரின் அம்மா.

தொலைக்காட்சி நிகழ்ச்சியை ரசித்துக் கொண்டே மதிய உணவு சாப்பிட்டுக் கொண்டிருந்த சங்கர் தன் அம்மாவைத் திரும்பிக்கூடப் பார்க்காமல் "எது வேண்டுமானாலும் செய்'' என்று பதில் அளித்தான்.

சங்கரின் அம்மா அதைக் கேட்டு வருந்தினாள். என்ன சாப்பிடுகிறோம் என்பது கூடத் தெரியாமல் சங்கர் வைத்த கண் எடுக்காமல் தொலைக்காட்சியையே எப்போதும் பார்த்துக் கொண்டிருப்பான். ஒரு பிஸ்கட், சாக்லெட் சாப்பிடுவதானால் கூட, தொலைக்காட்சியைப் பார்த்துக் கொண்டே தான் சாப்பிடுவான். படிப்பிலும், விளையாட்டிலும் பள்ளியில் முன்னணியிலுள்ள சங்கர் வீட்டில் மட்டும் தொலைக்காட்சி பெட்டி முன்னேயே தவம் இருப்பான்.

ஒரு நாள் சங்கரின் அப்பா அலுவலகத்திலிருந்து வீடு திரும்பும் போது, அவர் வந்ததைக் கூட கவனிக்காமல் சங்கர் தொலைக்காட்சியை ரசித்துக் கொண்டு உணவு அருந்திக் கொண்டு இருந்தான். அவனுடைய இந்த விரும்பத் தகாத பழக்கத்தை களைந்தெறிய அவன் தந்தை ஒரு திட்டமிட்டார். அதன்படி ஒரு நாள் தொலைக்காட்சியின் இணைப்பை சங்கருக்குத் தெரியாமல் துண்டித்து விட்டார்.

திடீரென தொலைக்காட்சி இயங்காமல் போனதைக் கண்ட சங்கர் பெரும் அதிர்ச்சி அடைந்தான். அது இயங்காததால் சிற்றுண்டியைப் புறக்கணித்து விட்டு, சங்கர் விளையாடச் சென்றான். விளையாடும் போது அவனுக்கு மிகவும் பசித்தது. விளையாடிவிட்டு வீட்டுக்கு வந்ததும் சங்கருக்கு தொலைக்காட்சி இல்லாமல் இரவு உணவு உண்ண பிடிக்கவில்லை. அவன் தந்தை அலுவலகத்திலிருந்து திரும்பியவுடன் தொலைக்காட்சி பெட்டியைப் பழுது பார்க்க வேண்டும் என்றும், அதில்லாமல் சாப்பாடு இறங்காது என்றும் சங்கர்







*தேவி பிரசன்னா*
*பெஹரா*
*மயூர்பஞ்ச்*

முறை இட்டான். ஆனால் அவன் தந்தையோ நாளைக்குப் பார்க்கலாம் என்று அலட்சியமாக பதில் அளித்தார்.

''அப்பா, தொலைக் காட்சி இல்லாமல் என்னால் சாப்பிடவே முடியாதே! இன்று நண்பகலும், மாலையும் நான் ஒன்றுமே சாப்பிடவில்லை. இப்போது பசிக்கிறது. ஆகையால் இன்றே தொலைக்காட்சியை யாரையாவது பழுது பார்க்கக் கூப்பிடுங்கள்'' என்று கெஞ்சினான்.

''பசியாயிருந்தால் போய் சாப்பிடு. அதற்கு தொலைக்காட்சி ஏன் வேண்டும்? இன்று என்னால் அதைப் பழுது பார்க்க முடியாது'' என்று அவன் தந்தை பிடிவாதமாக மறுத்து விட்டார்.

அம்மா தனக்கு ஆதரவாகப் பேசுவாள் என்ற சங்கரின் நம்பிக்கை வீணாயிற்று. ஒன்றுமே பேசாமல் அம்மா உள்ளே சென்று விட்டாள்.

வேறு வழியின்றி சங்கர் வேண்டா வெறுப்புடன் அன்று இரவு சாப்பிட அமர்ந்தான். தன் தந்தை யிடம் மீண்டும் தொலைக் காட்சி பழுது பார்ப்பதைப் பற்றிப் பேசிய சங்கரிடம் ''இன்று ஒருநாள் அது இல்லாமல் சாப்பிட்டுத்தான் பாரேன்'' என்று அவன் தந்தை சொன்னார்.

தன் தட்டில் பரிமாறப் பட்டிருந்த சப்பாத்தியையும், வெண்டைக்காய் கறியையும் சங்கர் உற்றுப் பார்த்தான். அவற்றின் சுவை எப்படி இருக்கும் என்று கூட அவனுக்குத் தெரியவில்லை. ஏனெனில் இதுவரை அவன் உணவுப் பண்டங்களின் சுவையைப் பற்றி கவனித்ததே யில்லை. இன்று அவன் கவனத்தை ஈர்க்க தொலைக்காட்சி இல்லாததால் வெண்டைக்காய் கறியையும் சப்பாத்தியையும் நிதானமாக ரசித்து உண்டான். அவை மிகச் சுவையாகவே இருந்தன. பல ஆண்டு களுக்குப் பிறகு அன்றுதான் சங்கர் வயிறு நிறைய ரசித்து சாப்பிட்டான்.

சில நாட்களிலேயே தொலைக்காட்சி இல்லாமல் உணவை ரசித்து சாப்பிட சங்கர் பழகிக் கொண்டான். அது மட்டுமல்ல, தன் பெற்றோர்களுடன் மனம் விட்டுப் பேசிக் கொண்டே சாப்பிட்டான். இதைத் தான் அவன் பெற்றோர்களும் பல நாட்களாகவே சங்கரிடம் எதிர்பார்த்தனர்.

சங்கரையும் அவன் பெற்றோர்களையும் பொறுத்தவரை இந்த நிகழ்ச்சி ஒரு திருப்பு முனையாக மாறியது.





# நிதியமைச்சர் பதவி



கே.ஸ்நேகா
ஹைதராபாத்

சுவர்ணபுரி நாட்டை விக்கிரம சேனன் என்ற மன்னர் ஆண்டு வந்தார். ராஜ்ஜியத்தின் நிதியமைச்சர் திடீரென இறந்து போனதால் அந்தப் பதவிக்கு வேறு ஒருவரை நியமிக்க வேண்டி இருந்தது. நிதியமைச்சரின் பதவி மிக முக்கியமானதாக இருந்ததால், அவசரமாக ஒருவரை நியமிக்க வேண்டிய அவசியம் இருந்தது. இந்தப் பதவியை அடைய பலர் போட்டியிட்டதால், விக்கிரம சேனருக்குத் தகுந்த நபரைத் தேர்ந்தெடுப்பது கடினமாக இருந்தது. ஆகவே அவர் அந்தப் பொறுப்பைத் தன் முதல் அமைச்சரிடம் ஒப்படைத்தார்.

தேர்வுக்கு வந்திருந்த பல நபர்களை சோதனையிட்ட முதல் மந்திரி, இறுதியில் இருவரை முதல் கட்டத் தேர்வில் தேர்ந்தெடுத்தார். சுனந்தன், விசால் என்ற அந்த இருவருமே அறிவு, திறமை, ஆகியவற்றில் சமமாகவும் இருந்தனர். ஆனால் இருவரில் ஒருவரை மட்டுமே தேர்ந்தெடுக்க வேண்டும். இந்த விஷயத்தை முதல் அமைச்சர் மன்னருடன் நீண்ட நேரம் விவாதித்து ஒரு திட்டம் தீட்டினார்.

அதன்படி மன்னர் அவ்விருவரையும் மறுநாள் தன்னிடம் அழைத்தார். அமைச்சரும் அப்போது உடன் இருந்தார். மன்னர் அவர்களிடம் ஆளுக்கு ஒரு பை கொடுத்து ''ஒவ்வொரு பையிலும் நூறு தங்க நாணயங்கள் உள்ளன. இதை நீங்கள் எடுத்துச் சென்று இன்று இரவு அரசினர் விடுதியில் ஓய்வு எடுங்கள். நாளை மீண்டும் ஒவ்வொரு பையிலுள்ள நூறு நாணயங்களையும் பத்திரமாகக் கொண்டு வாருங்கள்'' என்று சொல்லி அனுப்பினார்.

இருவரும் தங்களுக்குக் கொடுக்கப் பட்ட பைகளை எடுத்துக் கொண்டு அரசினர் விடுதிக்குச் சென்றனர். அன்றிரவு திடீரென சில கொள்ளைக்காரர்கள் விடுதிக்குள் நுழைந்து பணப்பைகளைப்







புனித்
ஜே.ஹிர்மத்
பெங்களூர்

பறிக்க முயன்றனர். ஆனால் சுனந்தனும், விசாலும் துணிச் சலுடன் அந்தக் கொள்ளைக்காரர்களை எதிர்த்துப் போராடி, தங்கள் பணப்பையை பத்திரமாக பாதுகாத்துக் கொண்டனர்.

மறுநாள் இருவரும் மன்னருடைய சபைக்குச் சென்று தாங்கள் முதல் நாள் பெற்றுக் கொண்ட பணப் பைகளை திருப்பிக் கொடுத்தனர். கொள்ளைக்காரர்களை எதிர்த்துப் போராடிய அவர்கள் துணிச் சலைப் பாராட்டிய மன்னன் பிறகு அந்தப் பைகளிலுள்ள நாணயங் களைத் தன் ஆட்களை விட்டு எண்ணச் சொன்னான். சுனந்தனின் பையில் நூறு காசுகளும் விசாலின் பையில் தொண்ணூறு மட்டுமே இருந்தது.

உடனே முதல் அமைச்சர் புன் முறுவலுடன், ''அரசே! விசாலை நிதியமைச்சர் பதவிக்கு நான் சிபாரிசு செய்கிறேன்'' என்றார். உடனே அதிர்ச்சியடைந்த சுனந்தன், ''இது என்ன அநியாயம்? அவனுடைய பையில் தொண்ணூறு நாணயங்கள் மட்டுமே அல்லவா இருந்தது!'' என்று கூவினான். மீண்டும் புன்னகை புரிந்த அமைச்சர் சுனந்தனை நோக்கி, ''சுனந்தா! நிதியமைச்சர் என்பவனுக்குத் திறமை, பொறுப்புணர்ச்சி, துணிச்சல் இருந்தால் மட்டும் போதாது. நேர்மை மிக முக்கியம். நாங்கள் வேண்டு மென்றே தொண்ணூறு காசுகளை மட்டுமே பைகளில் வைத்திருந்தோம். நீ விடுதிக்குச் சென்று பையை திறந்து பார்த்து காசுகளை எண்ணி இருக்கிறாய். தொண்ணூறு காசுகள் மட்டுமே இருக்கக் கண்டாய். எங்களுடைய வார்த்தையில் நம்பிக்கை இல்லாமல் நீ நாணயங்களை எண்ணிப்பார்த்திருக்கிறாய். பத்து காசுகள் குறைவாக இருந்ததும் உன்னிடமுள்ள பத்து காசுகளையும் சேர்த்துப் போட்டு நூறு இருப்பதாகச் செய்து நீ நேர்மையானவன் என்று தோன்றுமாறு செயற்பட்டாய். ஆனால் எங்கள் வார்த்தைகள் மீது ஆழ்ந்த நம்பிக்கை கொண்ட விசால் காசுகளை எண்ணவில்லை. எப்படி எடுத்துச் சென்றானோ, அதே போல் திருப்பிக் கொண்டு வந்தான். மற்ற எல்லா தகுதிகளிலும் நீங்கள் சமமாக இருந்தாலும், நேர்மையில் உன்னைவிட சிறந்தவன் விசால் என்று எங்களுக்குத் தோன்றுகிறது. ஆகவே அவனை சிபாரிசு செய்கிறேன்'' என்றார். சுனந்தன் பதில் பேசாமல் சபையை விட்டுச் சென்று விட்டான். விசால் நிதியமைச்சராகி சிறப்பாக பணி புரிந்தான்.



# கனவா? நனவா??



காவ்ய ஸ்ரீ பட்
ஔரங்காபாத்

பிரியா மிக சுறுசுறுப்பான புத்தி சாலியான சிறுமி. அவளுக்கு கதைப் புத்தகங்கள் படிப்பது என்றால் மிகவும் பிடிக்கும். ஒரு முறை பள்ளித்தேர்வுகள் முடிந்தவுடன், தன் விடுமுறையைக் கழிக்க பிரியா தனது பள்ளி நூலகத்திற்குச் சென்று நல்ல ஒரு கதைப் புத்தகம் தேடினாள். பல புத்தகங்கள் நூலகத்தில் தென்பட்டன. அவற்றுள் எதை எடுத்துப் படிப்பது என்று பிரியாவுக்குத் தடுமாற்றம் ஏற்பட்டது. அப்போது புத்தக அலமாரியின் ஒரு மூலையில் இருந்த பளபளப்பான அட்டையுடன் கூடிய ஒரு புத்தகம் அவள் கண்களைக் கவர்ந்தது. அதை எடுத்துக் கொண்டு தன் வீடு நோக்கி விரைந்தாள்.

வீட்டில் ஒரு சிற்றுண்டியை சுவைத்துக் கொண்டே நூலகத்தில் இருந்து கொண்டு வந்திருந்த புத்தகத்தைப் படிக்க ஆரம்பித்தாள். அந்தப் புத்தகத்தின் தொடக்கமே பயமூட்டு வதாக இருந்தது. பக்கங்களைப் புரட்டுகையில் திடீரென ஒரு பக்கத்தில் பெரிய கருமைநிற ஓட்டை தென்பட்டது. அடுத்த நிமிடம், பிரியா தன்னை யாரோ அந்த ஓட்டைக்குள் இழுப்பதை உணர்ந்தாள். அந்த ஓட்டைக்குள் கவர்ந்து இழுக்கப்பட்ட பிரியா தொடர்ந்து ஒரு இருண்ட குகைக்குள் சென்று கொண்டே இறுதியில் வேறொரு புதிய உலகத்தை அடைந்தாள். அந்தப் புதிய உலகம் ஒரே இருட்டாக இருந்தது. பல வினோத மான மனிதர்கள் தென் பட்டனர். சிலர் குருடாகவும், சிலர் நொண்டியாகவும் சிலர் கைகள் இல்லாமலும் இருந்தனர். பிரியாவுக்கு அவர்களைப் பார்க்கவே பயமாக இருந்தது.

திடீரென ஒரு கிழவன் தன் தோளில் பிராணவாயு சிலிண்டரை எடுத்துக் கொண்டு வருவதைக் கண்டாள். போதும் இந்தப் புது உலகம் என்று பிரியா திரும்பி ஓட முயற்சித்தாள். ஓடும்போது தடுக்கி விழுந்து காலில் சிராய்த்துக் கொண்டாள். அந்தக் கிழவன் ஓடி வந்து அவளைத் தூக்கி நிறுத்தி, ''பயப்படாதே! நான் உனக்கு உதவி செய்கிறேன்'' என்று

பி.சைலேஷ்
சிகந்தராபாத்

கூறி அவளுக்கு ஒரு பிராண வாயு சிலிண்டரைக் கொடுத்து முகர்ந்து பார்க்கச் சொன்னான்.

அவனைக் கண்டு பிரியா முதலில் பயந்தாலும், பிறகு அந்தக் கிழவன் நல்லவன்தான் என்று தெரிந்து கொண்டாள். அவனிடம் அந்தப் புதிய உலகத்தைப் பற்றிய விவரங்களைக் கேட்டாள். அதற்கு அவன் ''பிரியா, இதுதான் உன்னுடைய எதிர்கால உலகம். நீ இப்போது 23-வது நூற்றாண்டில் இருக்கிறாய்'' என்றான்.

''அப்படியா?'' என்று ஆச்சரியப்பட்ட பிரியா, ''ஏன் இந்த உலகம் இப்படி இருக்கிறது?'' என்றாள்.

''மனிதர்களாகிய நாங்கள் இயற்கையின் விதிகளை மீறி நடந்தோம். எங்களுடைய வசதிக்காக ஏராளமான பச்சை மரங்களை வெட்டி வீழ்த்தினோம். வான மண்டலத்தையும் ஆற்று நீரையும் மாசுபடுத்தினோம். ஏராளமான தொழிற்சாலைகளைக் கட்டினதால் உண்டான விளைவு இது. வான் வெளியிலிருந்த ஓசோன் வாயு நிரம்பிய ஓசோன் கவசத்தை எங்களுடைய கட்டுப்பாடற்ற செயல்களினால் துளைத்து நாசமாக்கினோம். ஓசோன் வாயு ஒரு கவசம் போல் எங்களைக் காத்து வந்தது. அது துளைக்கப் பட்டதால் சூரியனின் புற ஊதாக் கதிர்கள் எங்கள் மேல் பட்டு எங்களுக்கு உடலில் பல குறைபாடுகள் ஏற்பட்டன. நாங்கள் செய்த அடாத செயல்களின் விளைவை இப்போது அனுபவிக்கிறோம்'' என்றான்.

''இந்தப் பிரச்சினைக்குத் தீர்வு இல்லையா?'' என்று கேட்டாள் பிரியா. ''இல்லை. மிகவும் கால தாமதமாகி விட்டது. ஆனால் உன்னால் உதவ முடியும்'' என்றான் அந்தக் கிழவன்.

திடீரென பிரியா கண் விழித்தாள். அப்போதுதான் தான் இதுவரை கண்டதெல்லாம் கனவு என்று அவளுக்குப் புரிந்தது. ஆனால் அவள் காலில் உண்மையாகவே ஒரு சிராய்ப்பும் தென்பட்டது.

அப்படியானால் தான் கண்டது கனவில்லையா? தனக்கு சற்றுமுன் ஏற்பட்ட அனுபவம் உண்மைதானா? பிரியாவுக்கு ஒரே குழப்பமாக இருந்தது. ஆனால் ஒன்று மட்டும் தெளிவாகத் தெரிந்தது. அது சுற்றுச் சூழல் மாசிலிருந்து உலகை எவ்வாறு காப்பது என்பதுதான்.



# கனவினால் கற்ற பாடம்



பி.கார்த்திகேயா,
விஜயவாடா

''வேண்டாம் ராஜு, அதை அடிக்காதே. விட்டு விடு. ஏன் அந்த நாயை அடிக்கிறாய்?'' என்று கோபால் தன் அண்ணன் ராஜுவைப் பார்த்துக் கத்தினான். தெருவில் செல்லும் நாய்களை கல்லால் அடித்துத் துன்புறுத்துவது ராஜுவின் கெட்ட வழக்கங்களில் ஒன்று. இதைத் தவிர தும்பிகளையும் பட்டுப்பூச்சிகளையும் பிடித்து நூலில் கட்டித் தொங்க விடுவதும் அவன் பொழுது போக்காக இருந்தது.

பள்ளியிலும் ராஜு தும்பி, பட்டுப்பூச்சிகளை கைக்குட்டையைக் கொண்டு பிடித்துத் துன்புறுத்துவது உண்டு. தம்பி கோபால் ராஜுவைப் பற்றித் தன் தாயிடம் அடிக்கடி புகார் செய்வதுண்டு.



அவர்களுடைய அம்மாவும் ராஜுவை அடிக்கடி, ''ஏன் இவ்வாறு வாயில்லாப் பிராணிகளைத் துன்புறுத்துகிறாய்? இதற்கெல்லாம் நீ தண்டனை அனுபவிப்பாய்'' என்று திட்டுவது உண்டு. ஆனால் ராஜு அதைப் பொருட்படுத்தாமல், ''அம்மா, இவற்றால் என்னை என்ன செய்ய முடியும்?'' என்று இளக்காரம் செய்வது வழக்கம். ''சிரிக்காதே, உன்னைக் கடவுளே ஒருநாள் தண்டிப்பார்'' என்பாள்.

வழக்கம்போல் ஒரு நாள் சில வாயில்லாப்பிராணிகளைத் துன்புறுத்திவிட்டு ராஜு இரவு படுக்கச் சென்றான். மறுநாள் காலையில் தூக்கம் விழித்த ராஜு அவன் இரண்டு கைகளும் காணாததால் அதிர்ச்சியுற்றான். கைகள் இல்லாமல் படுக்கையை விட்டு எழுந்திருப்பதே கடினமாக இருந்தது. பயத்தில் உறைந்து போன ராஜு ''அம்மா!'' என்று கதறினான். உடனே ராஜுவின் அம்மாவும், கோபாலும்





ஹரிணி
வெங்கட்ராமன்
சென்னை

ஓடி வந்தார்கள். ''ஐயோ, உன் கைகள் எங்கே ராஜு?'' என்று கோபால் கத்தினான். அம்மா, ''உன்னை வாயில்லாப் பிராணி களைத் துன்புறுத்தாதே என்று எவ்வளவு முறை எச்சரித்தேன்! இப்போது பார், கடவுளே உன்னை தண்டித்து விட்டார்'' என்றாள் அம்மா.

அன்று கோபாலின் உதவியுடன் ராஜு பள்ளிக்குச் சென்றான். பள்ளியில் அவன் நண்பர்கள் எல்லாம் அவனைப் பார்த்து கேலி செய்தனர். பள்ளியில் கைகள் இல்லாமல் அவனால் ஒரு வேலையும் செய்ய முடியவில்லை. பள்ளியில் இருந்து திரும்பி வருகையில் நாய்கள் எல்லாம் ராஜுவைத் துரத்தின. பறவைகள் முதல் ஈக்கள், புழு பூச்சிகள் வரை எல்லாம் அவனைத் துரத்தித் துன்புறுத்தின. மிக சிரமப்பட்டு ராஜு வீட்டை அடைந்தான்.

வீட்டுக்கு வந்த பிறகு ராஜு முதன் முதலாக தான் இத்தனை நாட்கள் செய்த தீய செயல்களைப் பற்றி நினைவு கூர்ந்தான். ''எத்தனை வாயில்லா ஜீவன்களைத் துன்புறுத்தி இருக்கிறேன்! அவைகள் எல்லாம் எவ்வளவு துன்பப்பட்டு இருக்கும்! ஆகா, நான் செய்ததெல்லாம் தவறு. இனி எந்தப் பிராணியையும் துன்புறுத்த மாட்டேன்'' என்று தனக்குள் சொல்லிக் கொண்டே வருத்தத்துடன் படுக்கச் சென்றான். மறுநாள் விழித்துப் பார்த்தால் என்ன ஆச்சரியம்? ராஜுவின் காணாமற் போன கைகள் திரும்பி வந்து விட்டன. ''ஆகா! என் கைகள் திரும்பி வந்து விட்டன! திரும்பி வந்து விட்டன!!'' என்று மகிழ்ச்சியில் கூவினான்.

''ஏன் தூக்கத்தில் உளறுகிறாய் ராஜு?'' என்று யாரோ எழுப்ப ராஜு கண் விழித்துப் பார்த்தான். அவன் குடும்பத்தினர் அனைவரும் அவனைச் சூழ்ந்து நின்று கொண்டு அவனையே ஆச்சரியத்துடன் பார்த்துக் கொண்டுஇருந்தனர்.

அப்போதுதான் ராஜுவுக்குத் தான் இதுவரை கண்டதெல்லாம் வெறும் கனவு என்று புரிந்தது. பிறகு தான் கண்ட கனவை தன் குடும்பத்தினரிடம் கூறி ''அம்மா, என் கனவின் மூலம் நான் ஒரு நல்ல பாடம் கற்றுக் கொண்டேன்'' என்றான் ராஜு.



# குணாவின் பார்வையில்



தேஜல் டி. விடாகவே
சதாரா

ஒரு நகரத்தில் தன்ராஜ் என்ற பெரிய பணக்கார மனிதர் இருந்தார். அவருடைய ஒரே மகனான குணா, பெயரைப் போலவே நல்ல குணமுடையவன். ஏழை மக்கள் எவ்வாறு வாழ்க்கை நடத்துகின்றனர் என்பதைத் தன் மகனுக்கு காட்ட விரும்பிய தன்ராஜ் ஒருமுறை குணாவைத் தன்னுடன் ஒரு கிராமத்திற்கு அழைத்துச் சென்று அங்கே ஓர் ஏழைக் குடும்பத்துடன் ஐந்து நாட்கள் தங்கினார்.

ஐந்து நாட்களுக்குப் பிறகு வீடு திரும்பியதும் பயணம் எப்படியிருந்தது என்று தன்ராஜ் கேட்க, குணா மிகவும் நன்றாக இருந்தது என்றான்.

''ஏழைகளின் வாழ்க்கையை நேரிலே பார்த்தாயே! அதிலிருந்து நீ என்ன தெரிந்து கொண்டாய் குணா?'' என்று தன்ராஜ் கேட்டார்.

''நம்மிடம் ஒரு நாய்தான் உள்ளது. அவர்களிடம் நான்கு நாய்கள் உள்ளன.









தேவி பிரசன்னா
பெஹரா
மயூர்பஞ்ச்

நமது தோட்டத்தில் ஒரு சிறிய குளம் மட்டுமே உள்ளது. அவர்களுக்கோ வீட்டருகில் நதியே ஓடுகிறது. நமது வீட்டில் மின் விளக்குகள் மட்டுமே உள்ளன. அவர்களுக்கோ லட்சக்கணக்கான நட்சத்திரங்கள் இரவில் ஒளி அளிக்கின்றன. நம்முடைய நில உரிமையைக் குறிக்க நமது வீட்டைச் சுற்றி ஒரு சுற்றுச்சுவர் உள்ளது. அவர்களுக்கோ வானமே எல்லை. நாம் வசிக்கும் இடம் சிறியது. அவர்களைச் சுற்றியுள்ள நிலங்களோ வெகுதூரம் பரவியுள்ளன. நமக்கு உதவி செய்ய சில வேலையாட்கள் உள்ளனர். அவர்களுக்கோ ஏராளமான கிராம மக்கள் உதவி செய்கின்றனர். நாம் உணவுப் பொருட்களை விலை கொடுத்து வாங்குகிறோம். அவர்கள் தாமே உண்டாக்குகிறார்கள். நமக்கு நமது வீட்டு சுவர்கள் மட்டும் பாதுகாப்பு அளிக்கின்றன. அவர்களுக்கோ ஏராளமான நண்பர்கள் ஆபத்துக்கு உதவி செய்து பாதுகாப்பு அளிக்கின்றனர்'' என்று நீண்ட பிரசங்கமே செய்தான். தன்ராஜ் அசந்து போனார். தன்னுடைய மகனிடமிருந்து வேறு விதமான கருத்தை எதிர்பார்த்தார். மீண்டும் குணா, ''அப்பா, என்னை ஏழைகளுடன் தங்கச் செய்ததற்கு மிகவும் நன்றி. இப்போதுதான் தெரிகிறது நாம் தான் ஏழை என்று'' என்றான்.

நாம் பார்க்கும் கோணத்தைப் பொறுத்து உலகம் வேறுபடுகிறது. நம்மிடமுள்ள செல்வத்தால் உலகத்தில் உள்ள ஏராளமான பொருட்களை வாங்க முடியும், நிம்மதியைத் தவிர.

*ஆசிரியர் : நெப்போலியன் எப்போது பிறந்தார்?*
*மாணவன் : அவருடைய பிறந்த நாளன்று பிறந்தார்.*

***ஆர். நித்தேஷ் ராஜ்(12), பெங்களூர்.***





*பிரசாந்த் : நம் வகுப்புக்கு விவேக்தான் மாணிட்டர் என்று தெரியுமா?*
*ராஜா : அப்படியா? சரி, அப்போது லீடர் யார்?*

***ஜி.எஸ். அனுஷ்(10), ஓமன்.***



# கொல்லி மலை இரகசியம்



ரோசலினா தாஸ்
மயூர்பஞ்ச்

ரகு, ராமு, ரவி, மோனிஷா ஆகிய நான்கு நண்பர்களும் பள்ளி விடுமுறையில் கொல்லி மலைக்குப் பயணம் வந்தார்கள். மலையின் அடர்ந்த காட்டுப்பகுதியில் அவர்கள் நடந்து சென்று கொண்டிருந்த போது, அங்கே ஒரு தொழிற்சாலையைக் கண்டு திகைத்தார்கள். சமவெளிகளில் தான் தொழிற்சாலைகள் இருப்பது வழக்கம். இப்படி மலைச் சரிவில் காட்டுக்குள் இரகசியமான இடத்தில் ஒரு தொழிற்சாலை இருந்தால் அதில் ஏதோ மர்மம் உள்ளது என்று ஊகித்தார்கள். தொழிற்சாலையின் சுற்றுச் சுவரில் ஏறி உள்ளே பார்த்ததும் அவர்களுக்கு அதிர்ச்சி தரும் விஷயங்கள் அங்கே காத்திருந்தன. வெடி மருந்துக் குவியல்களும் சில துப்பாக்கிகளும் ஆங்காங்கே தென்பட்டன. ஒரு வேளை இது தீவிரவாதிகளின் மறைவிடமோ என்ற சந்தேகம் அவர்களுக்குத் தோன்றியது.







புனித் ஜே.
ஹிர்மத்
பெங்களூர்

ராமு, ''இது தீவிரவாதிகளின் மறைவிடம் தான். நாம் காவல் துறைக்குத் தகவல் கொடுப்போம்'' என்றான். ''அவசரப்பட வேண்டாம். நிச்சயமாகத் தெரிந்தால் மட்டுமே, தகவல் கொடுப்போம். இன்றிரவு என்னுடன் மோனிஷாவும், ரவியும் வரட்டும். இரகசியமாக உள்ளே நுழைந்து என்ன தான் நடக்கிறது என்று பார்ப்போம். ராமு மலைஅடிவாரத்தில் நிற்கட்டும். நாம் ஏதாவது ஆபத்தில் சிக்கினால் ஒரு சிவப்புக் கைக்குட்டையை கீழே போடுவோம். உடனே ராமு சென்று காவல் துறைக்குத் தகவல் தரட்டும்'' என்றான் ரகு. அவர்கள் போட்ட திட்டப் படியே, அன்றிரவு ரகு, ரவி, மோனிஷா ஆகிய மூவரும் தொழிற்சாலையின் உள்ளே இரகசியமாக நுழைந்தனர். ஒரு திறந்தவெளி மைதானத்தைக் கண்டதும் இது ஹெலிகாப்டர் இறங்கும் இடமாக இருக்கக்கூடும் என்று எண்ணினர். உள்ளே உள்ள கட்டங்களில் ஆயுதங்கள் தயாரிக்கும் வேலை நடைபெறுவதாகத் தோன்றியது. வெடி



மருந்தின் நெடி எங்கும் பலமாக அடித்தது. சந்தேகமே இல்லை. இது தீவிரவாதிகள் ஆயுதங்கள் தயாரிக்கும் இரகசிய இடம் என்ற முடிவுக்கு அவர்கள் வந்த சமயம், யாரோ ஒரு ஆள் இவர்களைப் பார்த்து விட்டான். அவன் இவர்களைத் துரத்த, தப்பித்தோம் பிழைத்தோம் என மின்னல் வேகத்தில் ஓடி மூவரும் மலையின் அடிவாரத்திற்குச் சென்றனர். ராமுவையும் அழைத்துக் கொண்டு நால்வரும் காவல் நிலையத்திற்குச் சென்றனர்.

உள்ளேயிருந்த காவல் துறை அதிகாரியிடம் பரபரப்புடன் ''ஐயா, நாங்கள் தீவிரவாதிகளின் மறை விடத்தைக் கண்டுபிடித்திருக்கிறோம். வாருங்கள், காட்டுகிறோம்'' எனக் கூவி அழைத்தனர். இந்த நடு இரவில் நான்கு குழந்தைகள் திடீரென காவல் நிலையத்திற்குள் நுழைந்து பரபரப்பான செய்தி ஒன்றைக் கூறுவதைக் கேட்ட அதிகாரி சற்று குழப்பம் அடைந்தார். ''தீவிரவாதிகளா? எங்கே பார்த்தீர்கள்?'' என்று கேட்டார். ''கொல்லி மலைக் காட்டில் அவர்கள் தொழிற்சாலை அமைத்து ஆயுதங்கள் தயாரிப்பதை நாங்கள் நேரிலே கண்டோம்'' என்று ரகு மூச்சுமுட்டக் கூறினான். அதைக் கேட்ட அதிகாரி குபீரெனச் சிரித்தார்.

''என்ன இது! இவர் ஏன் சிரிக்கிறார்?'' என்று திகைத்தவர்களை நோக்கி, ''அவர்கள் தீவிரவாதிகளுமில்லை, ஒன்றுமில்லை. அரசாங்கமே அங்கு ஒரு துப்பாக்கித் தொழிற்சாலையை சமீபத்தில் நிறுவியுள்ளது, அது தெரியாதா உங்களுக்கு?'' என்றாரே பார்க்கலாம் அந்த அதிகாரி. நான்கு நண்பர்களின் முகத்திலும் அசடு வழிந்தது. ''ஆனாலும் பரவாயில்லை. இந்த சிறு வயதில் நடு இரவில் அங்கு உள்ளே சென்று ஆராய்ச்சி செய்த உங்கள் தைரியத்தைப் பாராட்டுகிறேன்'' என்றார் அதிகாரி.

*ஜான் : என் வகுப்பில் நான் செய்யக்கூடிய ஒரு வேலையை வேறு யாராலும் செய்ய முடியாது. என் ஆசிரியரால் கூட முடியாது.*
*ஜெர்ரி : அப்படியென்ன வேலை?*
*ஜான் : என் கையெழுத்தை படிப்பது.*



***ஜி.ஆர். வெங்கடேஷ் (12), ஜக்காயாபேட்.***



*பயணி (ரயில் நிலையம் செல்லும் வழியில்) : உன்னுடைய வயல் வழியாக குறுக்கே நடந்து சென்றால், மூன்று மணி ரயிலை என்னால் பிடிக்க முடியுமா?*
*விவசாயி : தாராளமாக, என்னுடைய நாய் உங்களைப் பார்த்து விட்டால் அதற்கு முந்தைய ரயிலைக் கூட நீங்கள் பிடித்து விடலாம்.*



# தகுதிக்குத் தகுந்த வேலை

**பி**ரசாந்தபுரி ராஜ்ஜியத்தில் ரத்தினேஸ்வரர் என்ற பண்டிதர் இருந்தார். அறிவில் சிறந்த மேதையாகக் கருதப்பட்ட அவரது குருகுலத்தில் பல மாணவர்கள் பயின்று வந்தனர். அந்த நாட்டு மன்னரும் அவரிடம் மிகவும் மதிப்பு வைத்து அவரைத் தன் ராஜகுருவாகக் கருதி வந்தான். தன்னிடம் பயிலும் மாணவர்களின் படிப்பு முடிந்ததும் அவர்களது தகுதியைப் பொறுத்து அவர்களுக்குத் தகுந்த வேலைகளை அவர் சிபாரிசு செய்வதுண்டு. மிகச் சிறப்பாகப் பயிலும் மாணவர்களை, அவர் தன்னுடைய சிபாரிசுடன் மன்னரிடம் அனுப்புவதுண்டு. அந்த மாணவர்களுக்கு மன்னரிடமே பொறுப்புள்ள நல்ல வேலைகள் கிடைத்து விடும்.

ஒருமுறை இவ்வாறு நன்றாகப் பயின்ற ஐந்து மாணவர்களைத் தேர்வு செய்து அந்த ராஜகுரு மன்னரிடம் அனுப்பினார். அப்போது அந்த மாணவர்களில் நால்வரிடம் முறையே மரத்தாலான செருப்பு, கைப்பிரம்பு, சல்லடை, துடப்பம் கொடுத்து அனுப்பினார். ஐந்தாவது மாணவனை மழுங்க மொட்டை அடித்து அனுப்பினார்.

அந்த ஐவரும் மன்னரது சபையை அடைந்தனர். மன்னர் அப்போது பக்கத்து நாட்டு அரசரின் அழைப்பின் பேரில் சென்றிருந்ததால், நிர்வாகப் பொறுப்பு இளவரசனிடம் ஒப்படைக்கப்பட்டு இருந்தது.

அரியணையில் அமர்ந்திருந்த இளவரசனுக்கு வணக்கம் தெரிவித்த பின், தங்களை ராஜகுரு மன்னரிடம் பணிபுரிய அனுப்பியுள்ளதாகக் கூறினர். ராஜகுரு மிகச் சிறப்பான மாணவர்களை மட்டுமே அனுப்புவார் என்று அறிந்திருந்த இளவரசனுக்கு அவர்கள் கொண்டு வந்த பொருட்களைக் கண்டு குழப்பம்

- சரண் தேஜா -



உண்டாகியது. அவர்களில் ஒவ்வொரு வரும் எத்தகைய அரசுப் பணிக்குத் தகுதியானவர்கள் என்பதை உணர்த்தும் சங்கேதக் குறிப்புகளே அவர்களுடன் இருந்த பொருட்கள் என்று ஊகித்தாலும் அதை முழுமையாக இளவரசனால் அறிய இயலவில்லை. ஆகவே அந்தப் பொறுப்பைத் தன் முதல் மந்திரி யிடம் இளவரசன் ஒப்படைத்தான். முதல் மந்திரியும் அவர்களைத் தனித்தனியே பல கேள்விகள் கேட்டு அவர்களுடைய தகுதிகளை ஒருவாறு அறிந்து கொண்டார். பின்பு அவர்கள் கொண்டு வந்த பொருட்களின் சங்கேதக் குறிப்பின்படி மரத்திலான செருப்புகள் கொண்டு வந்தவனை அரண்மனைப் பொருளாளர் பதவியில் அமர்த்தினார். பிரம்பு கொண்டு வந்தவனை கல்வித் துறை அதிகாரி ஆக்கினார். சல்லடை கொண்டு வந்தவனை காவல் துறை அதிகாரியாக நியமித்தார். துடப்பம் கொண்டு வந்தவனை சேனாதிபதி ஆக்கினார். தலையை மொட்டை அடித்துக் கொண்டு வந்தவனை துணை மந்திரி ஆக்கினார்.

முதல் மந்திரியிடமிருந்து அவர்களது நியமனங்களைக் கேட்டறிந்த இளவரசனுக்கு அவர் எந்த அடிப் படையில் இவ்வாறு தேர்வு செய்தார் என்பது விளங்கவில்லை. ஆகவே அவன் அதைப்பற்றி விளக்கம் கேட்டான். முதல் மந்திரி புன்னகை புரிந்து கொண்டே ''இளவரசே கேளுங்கள்! மரச் செருப்புகள் நமது பாரத்தை சுமந்து கொண்டு நம்மை வழி நடத்துகின்றன. அதைக்

கொண்டு வருபவன் மிகப் பொறுப்புள்ள வேலையைத் திறம்படச் செய்து நாட்டை வழி நடத்தக் கூடியவன் என்று பொருள். ஆகவே அவனைப் பொருளாளர் ஆக்கினேன். பிரம்பு பொதுவாக ஆசிரியர்கள் கையில் காணப்படுவது. ஆகவே பிரம்பு கொண்டு வந்தவனைக் கல்வித்துறை அதிகாரி ஆக்கினேன். மூன்றாமவன் கொண்டு வந்தது சல்லடை. சல்லடை பயனுள்ள நல்ல பொருட்களைச் செல்ல அனுமதித்து பயனற்ற பொருட்களைப் பிரித்து எடுக்கிறது. நல்லவர்களுக்கு மதிப்பு அளிப்பதும் அவர்களைக் காப்பதும் தீயவர்களைக் கண்டு பிடிப்பதும் அவர்களை தண்டிப்பதும் ஒரு காவல்துறை அதிகாரியின் பணியாகும். ஆகவே சல்லடை கொண்டு வந்தவனை காவல் துறையில் அமர்த்தினேன். அடுத்தது நமது வீட்டுக்குள் அத்துமீறி நுழையும் தூசி குப்பை ஆகியவற்றை அப்புறப் படுத்துவது துடப்பத்தின் வேலை. நமது ராஜ்ஜியத்துக்குள் அத்துமீறிப் பிரவேசிக்கும் எதிரிகளை போர் செய்து வெளியேற்றுவதையே துடப்பம் குறிக்கிறது. ஆகவே துடப்பம் கொண்டு வந்தவனை படைத்தலைவன் ஆக்கினேன்'' என்றார். ''அமைச்சரே இதுவரை நீங்கள் கூறியது சரி. ஆனால் கடைசியாக மொட்டை அடித்துக் கொண்டு வந்த மாணவனை ஏன் துணை அமைச்சர் ஆக்கினீர்கள்?'' என்று இளவரசன் கேட்டான்.

''எனக்கும் முதலில் அது புரியவில்லை. வெகுவாக யோசித்த பின்னரே புரிந்தது. மனிதனுடைய தலைமுடியின் கீழே என்ன உள்ளது? அவனுடைய மூளை அந்த மாணவனுக்கு மூளையின் திறன் அதிகம் என்று உணர்த்தவே அவன் முடியைக் களைந்து அனுப்பினார் என்று புரிந்தது. ஆகவே அவனை துணை அமைச்சர் ஆக்கினேன்'' என்றார் முதல் மந்திரி.

முதல் மந்திரியின் விளக்கங்களைக் கேட்டபின் இளவரசனுடைய சந்தேகம் முற்றிலும் தீர்ந்தது. அவருடைய புத்தி கூர்மையை இளவரசன் மனமாரப் பாராட்டினான்.





# பணமூட்டை

பிரம்மதத்தன் காசியை ஆண்ட போது போதிசத்வர் ஒரு நிலச் சுவான்தாரரின் மகனாகப் பிறந்தார். அவர் வளர்ந்து பெரியவரான போது அவரது குடும்பம் நிறைய பணம் கொண்டு செழித்தது. அவருக்கு ஒரு தம்பியும் இருந்தான்.

கொஞ்ச நாட்களில் நிலச் சுவான்தாரர் இறக்கவே அண்ணனும் தம்பியும் குடும்ப விவகாரங்களைச் சேர்ந்தே கவனித்து வந்தார்கள். அவர்கள் இருவரும் ஒரு முறை ஒரு கிராமத்திற்குப் போய் தமக்கு வர வேண்டிய ஆயிரம் பவுன்களை வசூலித்தனர்.

அதனை ஒரு பையில் போட்டுக் கொண்டு இருவரும் ஊர் திரும்ப அந்த கிராமத்து ஆற்றங்கரைக்கு வந்து சேர்ந்தார்கள். படகுக்காரன் எங்கோ போயிருந்ததால் தமையரான போதிசத்வர் தம்பியிடம் பண மூட்டையைக் கொடுத்து விட்டுச் சற்று கண்மூடித் தூங்கினார். இதற்குள் தம்பி அதே போல ஒரு பண மூட்டையில் கற்களை வைத்துக் கட்டி எடுத்து ஒளித்துக் கொண்டான்.

சற்று நேரத்திற்கெல்லாம் படகுக் காரன் வரவே தம்பி தன் அண்ணனான போதிசத்வரை எழுப்பிப் அவரோடு படகில் ஏறி உட்கார்ந்தான். படகும் கிளம்பியது. படகு நடு ஆற்றில் போகும் போது தம்பி ஒரு மூட்டையை எடுத்து ஆற்றில் நழுவ விட்டு ''ஐயோ அண்ணா! பண மூட்டை ஆற்றில் விழுந்து விட்டதே'' எனக் கூவினான்.

போதிசத்வரும் ''போனால் போகட்டும். அது நம் பணமாக இருந்தால் நமக்கே கிடைக்கும்'' எனக் கூறினார். தம்பியும் தான் தந்திர மாக ஆயிரம் பவுன்களைத் தட்டி விட்டதாக எண்ணி மகிழ்ந்தான். ஆனால் உண்மையில் அவன் ஆற்றில் போட்டது பண மூட்டையையே.

கற்களை வைத்துக் கட்டிய மூட்டை தான் அவனிடம் இருந்தது.

அந்த ஆற்றில் ஒரு ஜலபூதம் இருந்தது. அது போதிசத்வர் முன்பு அவ்வூருக்குப் போகும் போது சாப்பிட்டு விட்டுப் போட்ட உணவை உண்டதால் விசேஷ சக்தியைப் பெற்றிருந்தது. எனவே தம்பி மூட்டையை ஆற்றில் போட்டதும் அது ஒரு மீனை உடனே விழுங்கச் சொல்லி கட்டளை இட்டது. மீனும் அப்பூதம் சொன்னபடி நடந்தது.

ஜலபூதம் தம்பி செய்த மோசத்தை ஊகித்து விட்டது. எனவே அந்தப் பண மூட்டையை எப்படியும் போதி சத்வரிடம் சேர்த்து விட எண்ணி மூட்டையை விழுங்கிய மீன் எங்கும் போகாத படி காவல் காத்தது.

போதிசத்வரும் அவரது தம்பியும் காசிக்கு வந்து தம் வீட்டை அடைந்தனர். தம்பி வீட்டில் தனியாக ஓரிடத்திற்குப் போய் தன்னிடமிருந்து மூட்டையை அவிழ்த்துப் பார்த்தான். அதில் கற்கள் இருப்தைக் கண்டு ''ஐயோ! நான் அண்ணனை ஏமாற்ற எண்ணி நானே ஏமாந்தேனே'' என எண்ணி மனம் புழுங்கினான்.

அன்று சில மீனவர்கள் ஆற்றில் வலை போட்ட போது ஜலபூதம் ஒரு மீனவனை நல்லவனாக மாற்றி அவனது வலையில் பண மூட்டையை விழுங்கிய மீனை விழச் செய்தது. அவனுக்கு அந்த மீனைப் பற்றிய விவரம் தெரியும் படியும் ஜலபூதம் செய்தது. அந்த மீனவன் அந்த மீனை எடுத்துக் கொண்டு காசிக்குப் போனான். அங்கு பெரிய மீனைப் பார்த்து அதனை வாங்க நினைத்தவர்கள் எல்லாரும் மீனவன் அந்த மீனின் விலை ஆயிரத்தோரு பவுன் என்றதும் திகைத்துப் போயினர். அவனோ தான் கூறிய விலையில் ஒரு செப்புக் காசு கூடக் குறைக்க முடியாது எனக் கூறவே அவனை எல்லாரும் பைத்தியம் என்று கூறி கேலி செய்யலானார்கள்.



அவனோ அதைப் பொருட் படுத்தாமல் நேரே போதிசத்வரின் வீட்டிற்குப் போனான். அவரிடம் மீனைக் காட்டி விலைக்கு வாங்கிக் கொள்ளச் சொன்னான். அவரும் என்ன விலை என்று கேட்கவே மீனவனுக்கு ''உங்களுக்கு என்றால் ஒரு பவுன்'' என்றான்.

போதிசத்வர் ஆச்சரியப்பட்டு ''ஏன் அப்படி!'' என்று கேட்க மீனவன் ''இதை நான் உங்களுக்காக

எடுத்து வந்தேன். அதற்காக கூலி ஒரு பவுன். அதனை மட்டும் பெற்றுக் கொள்வேன். மற்றவர்களுக்காக கொண்டு வரவில்லை. அதனால் அவர்கள் விலை கேட்டால் ஆயிரத்தோரு பவுன் எனக் கூறினேன்'' என்றான்.

போதிசர்வர் அந்த அதிசய மீனவனைப் பார்த்து திகைத்தார். அவன் கேட்டபடி ஒரு பவுனைக் கொடுத்து அவர் அந்த மீனை வாங்கிக் கொண்டார். அதனை அவர் தன் மனைவியிடம் கொடுக்கவே அவள் அதனை இரண்டாக நறுக்கினாள். அதன் வயிற்றிலிருந்து பண மூட்டை வெளியே விழுந்தது.

அது கண்டு போதிசத்வர் ''இது நம் பணமே. இதனை நம்மிடம் கொடுக்கவே இந்த மீனவன் வந்திருக்கிறான். இவனுக்கு எப்படி இது தெரிந்தது?'' என எண்ணி ஆச்சரியப்படலானார்.

அப்போது ஒரு அசரீரி வாக்கு ''போதிசத்வரே. நான் அந்த ஆற்றில் வாழும் ஜலபூதம். ஒரு நாள் நீங்கள் சாப்பிட்டு விட்டு மீதமான உணவை அந்த ஆற்றில் போட்டீர்கள். அதை சாப்பிட்ட எனக்கு உடனே அற்புத சக்தி கிடைத்தது.

உங்கள் தம்பி ஆற்றில் போட்ட பண மூட்டையை ஒரு மீனை விழுங்கச் சொன்னேன். அந்த மீனை ஒரு நல்ல மீனவனுக்கு கிடைக்கும்படி செய்தேன். அவனுக்கு எல்லா விவரங்களும் தெரியும்படி செய்யவே அவன் உங்கள் பணத்தை உங்களிடம் ஒப்படைக்க இங்கு வந்தான். நீங்கள் போட்ட உணவிற்கு நான் நன்றி செலுத்தினேன். உங்களை வஞ்சிக்க நினைத்த உங்கள் தம்பிக்கு மட்டும் இதிலிருந்து எதுவும் கொடுக்க வேண்டாம்'' என்று கூறிச் சென்றது.

அது கேட்டு போதிசத்வர் மகிழ்ந்தார். ஆனால் அது கூறியது போலத் தன் தம்பியிடம் நடக்காமல் அதில் பாதியான ஐநூறு பவுன்களைக் கொடுத்தார். தம்பியும் தனது அண்ணனுடைய கால்களில் விழுந்து மன்னிப்புக் கோரினான்.





# மகாவிஷ்ணு

இலட்சுமிதேவி வேதவதியாக அவதரித்து தவம் செய்து கொண்டிருக்கையில் இராவணன் அவளைச் சீண்டவே அவள் யோகாக்னியோடு கலந்து இலங்கையில் போய் பிறந்தாள். இலங்காபுரியை ஒட்டி ஒரு அழகிய தடாகம் இருந்தது. அந்தத் தடாகத்தில் இராவணன் தினமும் குளித்து விட்டு சிவனைப் பூசிக்கத் தாமரை மலர்களைக் கொய்து கொண்டு போவான்.

அன்றும் அவ்வாறே தாமரை மலர் பறிக்க அவன் சென்ற போது தடாகத்தின் நடுவே ஒரு பெரிய வெள்ளைத் தாமரை இருப்பதைக் கண்டான். அதில் அழகிய குழந்தை ஒன்று தங்க விக்கிரகம் போல இருப்பதையும் கண்டான். அதனை எடுத்து அவன் மகிழ்ச்சியுடன் பார்க்கையில் அசரீர வாக்கு ஒன்று ''இராவணா! இந்தக் குழந்தையாலே உனக்கும் இலங்கைக்கும் கெடுதல் நேரிடும்'' எனக் கூறி எச்சரித்தது.

அது கேட்டு இராவணன் அக் குழந்தையை கொன்று போட்டு விடும்படிக் கட்டளையிட்டான். வீரர்களால் அக்குழந்தையைக் கொல்ல முடியவில்லை. வாளை வீசினால் அது பொடி பொடியாகியது. நெருப்பில் போட்டால் நெருப்பே அணைந்து விட்டது. அதனால் அக்குழந்தையை ஒரு பெட்டியில் போட்டு மூடி சமுத்திரத்தில் அவர்கள் எறிந்து விட்டார்கள்.

அப்பெட்டி கடலில் மிதந்து போய் பிறகு தரையைப் பிளந்து பூமிக்கு அடியே போய் விதேகநாட்டு மிதிலா புரியை அடைந்தது. விதேக நாட்டு



மன்னன் ஜனகர். அவர் ஒரு யாகம் செய்ய பூமியை உழுத போது ஏரின் நுனியில் அக்குழந்தை இருந்த பெட்டி பட்டது. ஜனகர் அப் பெட்டியை எடுத்துத் திறந்து பார்க்க அதில் அழகிய பெண் குழந்தை இருப்பதைக் கண்டு அகமகிழ்ந்தார்.

ஏர் நுனியில் கிடைத்த பெண்ணாகையால் 'சிதம்' என்ற சொல்லிலிருந்து சீதை என அவள் பெயர் பெற்றாள். சனகரின் மகளாக வளர்ந்ததால் ஜானகி என்றும் விதேக மன்னனின் புதல்வியாதலால் வைதேகி என்றும் பெயர்களை அக்குழந்தை பெற்றாள். ஒரு முறை சீதை தன் தோழிகளுடன் பந்து விளையாடிக் கொண்டிருக்கையில் பந்து ஜனகர் பூசித்து வரும் கனமான வில்லான சிவதனுசின் அடியே போய் விட்டது. முன்னூறு பேர்கள் தூக்கக் கூடிய அந்த வில்லை சீதை அனாயாசமாக எடுத்து வைத்து விட்டுத் தன் பந்தை எடுத்துக் கொண்டாள். இதைக் கண்டு வியந்த ஜனகர் ''இந்த வில்லை எடுத்து வளைத்து நாண் ஏற்றுபவனையே இந்தச் சீதைக்குக் கணவனாக்குவேன்'' என சபதம் செய்தார்.

சீதையின் சுயம்வரத்திற்கு அரசர்களுக்கு அவ்விஷயத்தை முன் கூட்டியே சொல்வது என்று தீர்மானித்து அவர் சீதையை வளர்த்து வரலானார். இந்த சமயத்தில் தான் விசுவாமித்திரர் அயோத்திக்குப் போய் தசரதரிடம் யாகத்தைக் காக்க இராமரையும் இலட்சுமணனையும் தன்னோடு அனுப்பும்படிக் கேட்டார். தசரதனோ ''அவர்கள் சிறுவர்களாயிற்றே. நான் வந்து தங்களது யாகசாலையைக் காவல் புரிகிறேன்'' என்றான். விசுவாமித்திரரோ ''உன் புதல்வர்களுக்கு க்ஷத்திரியர்கள் கற்க வேண்டிய வித்தைகளைக் கற்றுக் கொடுக்கவும் வேண்டும். அதற்காகத்தான் என்னோடு அனுப்பும்படி நான் கேட்கிறேன்'' எனக் கூறி வசிஷ்டரை அர்த்த புஷ்டியுடன் பார்த்தார்.

வசிஷ்டரும் புன்னகைப் புரிந்தவாறே இராமரையும் இலட்சுமணனையும் விசுவாமித்திரருடன் அனுப்பி வைக்கும்படி தசரதரிடம் கூறினார். தசரதரும் அவர்கள் இருவரையும் விசுவாமித்திரருடன் அனுப்பி வைக்கவே அவர்களும் முனி குமாரர்களின் உடை அணிந்து



வில் அம்புகளை எடுத்துக் கொண்டு விசுவாமித்திரருடன் சென்றனர்.

வழியில் விசுவாமித்திரர் அம்பு எய்வதிலுள்ள நுணுக்கங்கள் பல வற்றை அவர்களுக்குக் கூறினார். அவர்களும் அவற்றைக் கற்றுக் கொண்டனர். அவர்கள் சித்தா சிரமத்தை அடைந்தனர். விசுவாமித் திரரும் மற்ற முனிவர்களோடு சேர்ந்து யாகத்தை ஆரம்பித்தார். யாகத்தைக் காக்க இராமரும் இலட்சுமணரும் வில்லும் அம்புகளும் வைத்து கொண்டு காவலாக நின்றனர்.

யாகத்தை அழிக்க தாடகை முதலில் வந்தாள். பெண்ணாயிற்றே என்று இராமர் தயங்கவே விசுவாமித்திரர் அவள் அரக்கி என்றும் அவள் யாகத்தைத் தடுப்ப தால் அவளைக் கொல்வது பாவ மல்ல என்றும் கூறினார். இராமரும் ஒரு கூரிய அம்பை எய்து அவளைக் கொன்றார்.

அடுத்து அவளது மைந்தர்களான மாரீசனும் சுபாகுவும் யாகத்தை அழிக்க வந்தனர். இராமர் விட்ட ஒரு அம்பு சுபாகுவைக் கொன்றது. மற்ற அம்பு மாரீசனைத் தாக்க வரவே அவன் பயந்து ஓடி இலங்கையில் போய்த் தான் நின்று திரும்பிப் பார்த்தான்! நல்லவேளை. அது வரை அந்த அம்பு வரவில்லை. விசுவாமித் திரரின் யாகமும் நன்கு முடிந்தது. அவர் யாக குண்டத்திலிருந்து சக்தி வாய்ந்த பாணத்தை எடுத்துக் கொடுத்து ''இது எதிரியைத் தாக்கி விட்டு உன்னிடமே வந்து சேரும் சக்தி வாய்ந்தது'' என்றார். இராமரும் அதனை வாங்கிக் கண்களில் ஒற்றிக் கொண்டு வைத்துக் கொண்டார்.

இந்த யாகம் முடிய சிறிது காலம் பிடித்தது. இந்த காலத்தில் விசுவா மித்திரர் பல போர் முறைகளை இராமருக்கும் இலட்சுமணனுக்கும் கற்றுக் கொடுத்தார். அவர் ''இராமா! என்னைப் போல நீயும் சூரிய வம்சத்தில் பிறந்தவன். அதனால்தான் மிகவும் ஆர்வத்தோடு உனக்குப் போர்க் கலைகளை எல்லாம் கற்றுக் கொடுக்கிறேன். நீ எனது சீடன் என்பது பற்றிப் பெருமைப் படுகிறேன்'' என்றார். இராமரும் ''குரு தேவரே! எல்லாம் தங்கள் அனுக்கிரகம்தான்'' என்று பணி வுடன் கூறினார்.

இச்சமயத்தில் சனக மன்னர் சீதையின் சுயம்வரத்திற்கு ஏற்பாடு



செய்து மன்னர்களுக்கும் ரிஷி முனிவர் களுக்கும் தகவல் அனுப்பினார். விசுவாமித்திரருக்கும் அத்தகவல் கிடைக்கவே அவர் இராமரையும் இலட்சுமணனையும் அழைத்துக் கொண்டு மிதிலையை நோக்கிச் சென்றார்.

வழியில் கௌதமரின் ஆசிரமம் இருந்தது. அவ்வழியே சென்ற இராமரின் கால் ஒரு பாறை மீது பட்டதும் அது பெண்ணாக மாறி அவள் இராமரை வணங்கினாள். அவள்தான் கௌதமரின் மனைவி அகல்யை. கௌதமரின் சாபத்தால் அவள் கல்லாகி இருந்தாள். இராமரின் கால் பட்டால் அவளுக்கு சாப விமோசனம் என அவர் கூறி இருந்ததால் இராமரின் கால் பட்டதும் அவளுக்கு இருந்த சாபம் விலகியது.

அப்போது கௌதமரும் அங்கு வந்தார். அவரும் இராமரைப் பார்த்து ''இராமா! உன்னால் இவள் சாபம் விலகி முன் போலானாள். இவள் என் மனைவி அகல்யை'' என்றார். ஒரு பெண்ணிற்கு சாப விமோசனம் அளிக்கும் சக்தி தனக்கு இருக்கிறதா என எண்ணியவாறே அவர் கௌதமரையும் அகல்யையும் பார்த்தார். கௌதமரும் ''ஆமாம். இராமா! நீ சக்தி வாய்ந்தவனே'' என கூறி ஆசீர்வதித்தார். விசுவாமித்திரரும் கௌதமர் கூறியதை ஆமோதிப்பது போலத் தலையை ஆட்டிப் புன்னகை புரிந்தார்.

சூதர் இதனைக் கூறி ''விஷ்ணுவின் அவதாரங்களில் இராமாவதாரமும் பின் வந்த கிருஷ்ணாவதாரமும் பல நல்ல செயல்களைப் புரிந்து மக்கள் மனதைக் கவர்ந்தன'' எனக் கூறி மேலும் தொடர்ந்தார்.

கௌதமர் எல்லாரையும் தம் ஆசிரமத்துள் அழைத்துச் சென்றார். அவர் அளித்த உபசரிப்பை ஏற்ற பின் விடை பெற்றுக் கொண்டு விசுவா மித்திரர் இராமரையும் இலட்சு மணனையும் அழைத்துக் கொண்டு மிதிலாபுரிக்குச் சென்றார்.

விசுவாமித்திரரை அழைத்தது போலவே சனகரின் மந்திரி சதானந்தர் மற்றும் பல முனிவர்களையும் அழைத்திருந்ததால் வழி நெடுக சீதையின் சுயம்வரம் பற்றிய பேச்சாகத்தான் இருந்தது. விசுவா மித்திரரும் இராமரும் இலட்சு மணனும் மிதிலையை அடைந்தனர்.

அப்போது சீதை தன் தங்கையான ஊர்மிளையுடன் சேர்ந்து பூங்காவில் உலாவிக் கொண்டிருந்தாள். அப்போது அவ்வழியே இராமரும் இலட்சுமணனும் சென்று கொண்டு இருப்பதை அவர்கள் பார்த்தார்கள். சீதை இராமரைப் பார்த்து தன் மனதைப் பறி கொடுத்துத்தான் விட்டாள். ஊர்மிளையும் இலட்சு மணனைக் கண்டு அவனே தன் கணவன் எனத் தீர்மானித்துக் கொண்டாள். இராமரும் அதே சமயம் சீதையைப் பார்க்கவே அவள் நாணத்தால் தலை குனிந்து கொண்டு அங்கிருந்து அரண்மனைக்குள் ஓடி விட்டாள்.

சுயம்வர மண்டபத்தில் வைக்கப் பட்ட சிவதனுசை எந்த மன்ன னாலும் தூக்கக் கூட முடியவில்லை. அப்போது சனகர் அங்கு கூடி இருந்த மன்னர்களைப் பார்த்துப் பெரு மூச்சு விட்டார். அவரது கவலையைக் கண்ட விசுவாமித்திரர் இராமரிடம் வில்லைத் தூக்கி நிறுத்தி நாணேற்றும் படிக் கூறினார்.

குருவின் கட்டளைப் படி இராமர் சிவதனுசை எடுக்கச் சென்றார். முதலில் அவர் அந்த வில்லை மரியா தையுடன் வணங்கினார். பிறகு அவர் ஒரு யானை கரும்பைப்பற்றுவது போல எளிதாகச் சிவதனுசை எடுத்து நிறுத்தி நாணேற்ற வளைத்தார். அப்போது அந்த வில் படீரென்ற பெருத்த சத்தத்தோடு முறிந்தது.

அந்த சத்தம் மகேந்திர மலையில் அமர்ந்து தவம் செய்து கொண்டிருந்த பரசுராமர் காதிலும் விழுந்தது. பரசுராமர் தாம் விஷ்ணுவின் அவதாரம் என்பதை உணர்ந்து இப்போது விஷ்ணுவின் மற்ற அவதாரமான இராமருக்குத் தன்னிட முள்ள கோதண்டம் என்ற வில்லைக்



கொடுத்து விடும் எண்ணத்தோடு அங்கிருந்து கிளம்பினார்.

சிவதனுசு முறிந்ததும் அதனை வளைத்து முறித்த இராமரின் கழுத்தில் சீதை மலர் மாலையை போட்டாள். சனகரும் உடனே தசரதருக்குச் செய்தி அனுப்பி விட்டு சீதைக்கும் இராமருக்கும் நடக்கப் போகும் விவாகத்திற்கான ஏற்பாடு களைச் செய்யலானார். தசரதரும் தம் குடும்பத்தவருடன் மிதிலைக்கு வந்து சேர்ந்தார்.

இராமர் சீதை விவாகத்தின் அன்றே சீதையின் தங்கையான ஊர்மிளையை இலட்சுமணனுக்கு மணமுடித்து வைக்க ஏற்பாடாயிற்று. இது போல பரதனுக்கு மாண்டவியையும் சத்துருகனனுக்கு சுருதகீர்த்தியையும் மணமுடித்து வைத்தார்கள்.

சீதா கல்யாணத்தோடு அவளது மற்ற மூன்று சகோதரிகளின் விவாக மும் தசரதரின் மைந்தர்களுடனேயே நடந்தது சிறப்பாக விளங்கியது.

தசரதர் தம் புதல்வர்களையும் மருமகள்களையும் அழைத்துக் கொண்டு மிதிலையிலிருந்து அயோத்திக்குக் கிளம்பினார். வழியில் ஆவேசத்தோடு பரசுராமர் வந்து நிற்கவே தசரதர் அவரிடம் இராமருக்குப் பதிலாகத் தன்னைத் தாக்கித் தன் தலையை வெட்டி விடும்படி வேண்டினார்.

பரசுராமரோ ''இராமா! வெகு நாட்களாக உபயோகப் படுத்தாம லிருந்த சிவதனுசை எடுத்து நிறுத்தி விட்டதற்காகக் கர்வப் பட்டுக் கொள்ளாதே. இதோ பார். கோதண்டம் இது நாராயணனின் வில். எங்கே இதனை எடுத்து அம்பை எய்து காட்டு பார்க்கலாம்'' என்று கூறி கோதண்டத்தை எடுத்து நீட்டினார்.

இராமர் அதனை வாங்கிக் கொண்டார் அப்போது பரசுராமரிடம் இருந்த விஷ்ணு அம்சம் மறைந்து போயிற்று. அது இராமரிடம் வந்து சேர்ந்து விட்டது. இராமர் கோதண்டத்தில் அம்பை வைத்துக் கொண்டு எய்வதற்குத் தயாராக நின்றார்.

(தொடரும்)



# வியாபார ரகசியம்

சிதம்பரமும் அண்ணாமலையும் ஒரு நகரத்தின் பெரிய வியாபாரிகளாக இருந்தனர். இருவருக்கும் இடையே வியாபாரத்தில் கடும் போட்டி நிலவியது. ஒருநாள் ஒரு இளைஞன் அண்ணாமலையைத் தேடி வந்தான்.

''என்ன விஷயம்?'' என்று அண்ணாமலை கேட்டார்.

''ஐயா என் பெயர் பாலாஜி. நான் சிதம்பரத்திடம் வேலை பார்த்துக் கொண்டிருந்தேன். அவர் கொடுத்த சம்பளம் மிகக் குறைவாக இருந்ததால், வேலையிலிருந்து நின்று விட்டேன். உங்களிடம் வேலை பார்க்க விரும்புகிறேன்'' என்றான்.

''சிதம்பரத்தின் வியாபார ரகசியங்களை எனக்குச் சொல்வாயா?'' என்று கேட்டார் அண்ணாமலை.

''மன்னித்து விடுங்கள் ஐயா, அவற்றை உங்களிடம் சொல்ல என்னால் இயலாது. ஏனெனில் அவற்றைத் தங்களிடம் சொன்னால், பிறகு என்னை உங்களிடம் வேலைக்கு சேர்த்துக் கொள்ள மாட்டீர்கள்'' என்றான் பாலாஜி.

''ஏன் அப்படி சந்தேகப் படுகிறாய்?'' என்று அண்ணாமலைக் கேட்க, ''எனது வியாபார ரகசியங்களை அவருக்குச் சொல்லமாட்டாய் என்பது என்ன நிச்சயம் என்று நீங்கள் அடுத்ததாகக் கேள்வி கேட்பீர்கள். அதனால் தான்'' என்றான் பாலாஜி குபீரென்று அண்ணாமலை சிரித்தார். ''பாலாஜி நீ கெட்டிக்காரன் மட்டுமல்ல மிகவும் நாணயமானவன் என்றும் தோன்றுகிறது. எங்களுக்குள் வியாபாரத்தில் போட்டி உள்ளது உண்மையே. ஆனால் அதற்காக நேர்மையற்ற வழிகளில் உன்னை ஈடுபடுத்த மாட்டேன். நீ இன்றே வேலையில் சேரலாம்'' என்று இன்முகத்துடன் பாலாஜியை வரவேற்றார்.

**-சந்தன் ராவத்**





# சிட்டுக் குருவி

மாளவிகாபுர நாட்டினை ஒட்டிய அடர்ந்த காட்டில் வீரபத்திரர் என்ற கிழவரும், மிக அழகான பதினாறு வயது நிரம்பிய சந்திரஹாசினி என்ற அவருடைய பேத்தியும் ஒரு குடிசை அமைத்து வசித்து வந்தனர்.

தாங்கள் தன்னந்தனியாக காட்டில் ஏன் வசிக்க வேண்டும் என்று சந்திர ஹாசினி அடிக்கடி தாத்தாவை கேட்பதுண்டு. பலமுறை பதில் சொல்லாத அவர் ஒருநாள் அந்த உண்மையைக் கூறினார். மாளவிகா புர நாட்டு மன்னரான தீரசிம்மனிடம் ரதம் ஓட்டுபவராக அவர் வேலை செய்து வந்தார். ஒரு முறை தீரசிம்மனுக்கும், அயல்நாட்டு அரசனுக்கும் நிகழ்ந்த போரில், தாத்தா மன்னருடைய ரதத்தை போர்க்களத்தில் செலுத்திக் கொண்டிருந்த போது எதிரியின் ஈட்டி ஒன்று தீரசிம்மனை தாக்கிக் காயப் படுத்தி விட்டது. போரின் இறுதியில் தீரசிம்மன் வென்றாலும் ரதம் சரியாக ஓட்டாததால் தான், ஈட்டி தன் மீது பட்டது என்று கருதி தீர விசாரிக் காமல் அவரை நாடு கடத்தி விட்டார். அப்போதிலிருந்து தாத்தா தன் பேத்தியுடன் காட்டில் வசிக்கிறார்.

ஒருநாள் சந்திரஹாசினியின் கண்களில் தரையில் விழுந்து துடித்துக் கொண்டிருந்த ஒரு சிட்டுக்குருவி தென்பட்டது. அதை நெருங்கிப் பார்த்ததும், அது காய முற்றுப் பறக்க முடியாமல் இருப்பதைக் கண்டாள். உடனே அந்தக் சிட்டுக்குருவியை தன் குடிசைக்கு எடுத்து வந்து, அதன் காயத்திற்கு மருந்திட்டு அதற்கு உணவளித்துப் பராமரித்தாள். அவளுடன் கூடவே அந்தக் சிட்டுக் குருவியும் இருக்கத் தொடங்கியது.

ஒருநாள் திடீரென மன்னர் தீரசிம்மன் தன் வீரர்களுடன் சந்திர ஹாசினியின் குடிசைக்கு வந்து

- ராமானந் சர்மா -

சேர்ந்தார். அந்த சமயம் தாத்தா எங்கோ வெளியில் சென்றிருந்தார். மன்னர் அவளை நோக்கி, ''பெண்ணே! சில நாட்களுக்கு முன் என்னுடைய ஒரே மகன் இந்தக் காட்டில் வேட்டையாட வந்தான். அப்போது ஒரு மரத்தடியில் ஒரு யோகி அமர்ந்து தவம் செய்து கொண்டிருப்பதை என் மகனும் அவனுடன் வந்த வீரர்களும் பார்த்தனர். வீரர்களில் ஒருவன் வேண்டுமென்றே இறந்த ஒரு சிட்டுக்குருவியை அந்த யோகியின் தலையில் வைத்தான். தவம் கலைந்து விழித்த யோகியின் கண்களில் என் மகன்தான் முதலில் தென்பட்டான். என் மகன் தான் இவ்வாறு திமிராக செய்தவன் என்று தவறாக நினைத்த யோகி, அவனை ஒரு சிட்டுக் குருவியாக மாறும் படி சாபம் கொடுத்து விட்டார். அதிலிருந்து என் மகன் இந்தக் காட்டில் சிட்டுக் குருவியாகத் திரிந்து கொண்டி ருக்கிறாள். நீ இந்தக் காட்டிலேயே இருப்பவள் ஆதலால் உன் உதவி கொண்டு அவனைக் கண்டுபிடிக்க முடியும் என நினைக்கிறேன்'' என்றார்.

''மகாராஜா, கவலைப்பட வேண்டாம். காயமடைந்த அந்தக் சிட்டுக்குருவிக்கு நான்தான் சிகிச்சை அளித்தேன். அது இங்குதான் அருகில் இருக்கிறது'' என்று கூறி கைதட்டி சிட்டுக்குருவியை அழைக்க சிட்டுக் குருவி பறந்து வந்து அவள் தோள் மீது அமர்ந்தது. இவ்வளவு எளிதில்



சிட்டுக்குருவி தென்பட்டவுடன், தன் மகனே மீண்டும் கிடைத்து விட்டது போல் தீரசிம்மன் பெரு மகிழ்ச்சி அடைந்தான். ''ஆனால் மகாராஜா! இளவரசருக்கு சுய உருவம் மீண்டும் எப்படி கிடைக்கும்? என்று சந்திர ஹாசினி கவலையுடன் கேட்டாள்.

''கவலை இல்லை. சாபம் கொடுத்த யோகியை நேரில் சந்தித்து என் மகன் குற்றமற்றவன் என்பதையும் தீர விசாரிக்காமல் அவர் சாபம் கொடுத்து விட்டார் என்பதையும் அவருக்கு விளக்கிக் கூறினேன். தன் தவறை உணர்ந்த யோகி இந்த மந்திர நீரை என்னிடம் கொடுத்து சிட்டுக் குருவியின் மீது தெளித்தால் இளவரசன் சுய உருவம் பெறுவார் என்று சொல்லியுள்ளார்,'' என்று கூறி நீர் தெளிக்க மன்னர் முன் வந்தார்.

''கொஞ்சம் நில்லுங்கள்'' என்று

அவரைத் தடுத்த சந்திரஹாசினி ''மன்னரே சற்றுப் பொறுங்கள். இப்போது நீங்கள் முன்பு செய்த தவறுக்கு பிராயசித்தம் கிடைத்து விடும்'' என்றாள்.

''நீ என்ன சொல்கிறாய்?'' என்று ஆச்சரியத்துடன் மன்னர் கேட்க, ''மகாராஜா, நான் தங்களுடைய தேரோட்டி வீரபத்திரரின் பேத்தி. முன்பு போர்க்களத்தில் ரதம் சரியாக செலுத்தவில்லை என்று தீர யோசிக் காமல் ஒரு முடிவு செய்து அவரை நாடு கடத்தினீர்கள். அதே போன்ற யோகியின் எண்ணத்தால் உங்கள் மகனுக்கு இந்த நிலை ஏற்பட்டது. என் தாத்தா குற்றமற்றவர். அவரது கையினால் இந்த மந்திர நீரை சிட்டுக்குருவி மீது தெளிக்கச் செய்யுங்கள். அவரை மன்னித்து மீண்டும் எங்களுக்கு வாழ்வு அளியுங்கள்'' என்று கெஞ்சினாள்.

அந்த சமயம் வெளியில் சென்றிருந்த அவளது தாத்தா திரும்பி விட்டார். தனது மன்னரைக் கண்டதும் விழுந்து வணங்கினார். மன்னர், ''வீர பத்திரா! என் தவறுக்கு வருந்துகிறேன். இதற்குப் பரிகாரமாக உனது கையினால் இந்த நீரை சிட்டுக்குருவி மீது தெளித்து என் மகனுக்கு சுய உருவம் கொடு'' என்றார். நடந்ததை யறிந்த தாத்தா ''நீங்கள் கொடுத்த தண்டனையினால் தான் இன்று இளவரசரைக் காப்பாற்ற முடிந்தது. எல்லாம் நன்மைக்கே'' என்று கூறி நீரைத் தெளித்து சிட்டுக்குருவியை பழையபடி இளவரசன் ஆக்கினார். பழைய உருவம் பெற்ற இளவரசன் சந்திஹாசினிக்குத் தன் நன்றியை தெரிவித்து விட்டு, ''தந்தையே என் உயிரை இவள்தான் காப்பாற்றினாள். என்னை கண்ணுங்கருத்துமாய் அன்புடன் பராமரித்தாள். இப்படிப் பட்டவளையே மனைவியாக அடைய விரும்புகிறேன்'' என்றான்.

''சந்திரஹாசினிக்கு சம்மதமா என்று கேள்'' என்று மன்னர் கேலி செய்ய அவள் நாணித் தலை குனிந்தாள். விரைவிலேயே இளவரசன் சந்திரஹாசினியை மணம் செய்து கொள்ள, தாத்தாவும் பேத்தியும் காட்டை விட்டு நாட்டில் குடி புகுந்தனர்.



# சூர்யா

16

சூழ்ச்சியினால் ராஜ்ஜியத்தை இழந்து காட்டில் வசித்து பின்னர் அகால மரணம் அடைந்த மன்னர் சாந்திதேவருக்கு ஏற்பட்ட ஒரே ஒரு நல்ல விஷயம் அவர் மகன் உயிர் தப்பிப் பிழைத்து ஜெயாநந்த முனிவரிடம் வளருவது தான். ஜெயாநந்தர் வசந்தனின் உதவியுடன் மன்னரின் ஈமக்கிரியைகளை நடத்தினார். வசந்தனும், இளவசனும் ஒருவரோடு ஒருவர் நன்கு பழகுகின்றனர்.

## வீர இளவரசனின் துணிகரச் செயல்கள்

ஓவியம் : காந்தி அய்யா

ஜெயாநந்தரும் வசந்தனும் ஆசிரமத்திற்குத் திரும்புகின்றனர்.













அனைவரையும் அமிருதபுரிக்கு அனுப்பி விடு. மந்திரி மான வேந்திரருக்குக் கூட மன்னரின் மரணத்தைப் பற்றித் தெரிய வேண்டாம்.
அப்படியே ஆகட்டும். இப்போது நான் விடை பெற்றுக் கொள்ளட்டுமா சுவாமி?
இந்த தாயத்து உனக்குப் பாதுகாப்பு அளிக்கும்.


இதற்கிடையில் ஜமீன்தார்களிடம் இருந்து அரிசியைக் கைப்பற்றும் வீரசிம்மனின் திட்டங்களை வசந்தனுடைய ஆட்கள் தடுத்து விடுவதால் வீரசிம்மனின் கோபம் அதிகமாகிறது.
வண்டிகளை நிறுத்தாதே. இது மன்னரின் கட்டளை.
அரிசியை எடுத்துச் செல்லாதீர்கள். நாங்கள் பட்டினி கிடக்க வேண்டியது தான்.


வீரசிம்மனை எதிர்த்து செய்யும் கிளர்ச்சிக்கு நாங்கள் ஆதரவு அளிக்கிறோம்.
அனைவரும் ஒருங்கிணைந்து செயற்பட வேண்டும்.
வசந்தனைப் பற்றி தகவல் உண்டா?
ஏராளமான மக்கள் அவனுக்குத் துணை நிற்கிறார்கள் குருவே!
வசந்தன் எங்கே? பல நாட்களாகக் காணவில்லையே!
தான் நடத்தும் போராட்டத்திற்கு மக்களை திரட்டுகிறான்!


என் நண்பனுக்கு ஆபத்து ஒன்றும் வரக்கூடாது!
சூர்யா நலமா?
அண்ணா, வந்து விட்டீர்களா!
நான் அமிருதபுரிக்குச் சென்றிருந்தேன். என் ஆட்கள் யாவரும் அங்கே நலமாக உள்ளனர்.
உங்களுடைய போராட்டத்தில் நான் எப்போது பங்கேற்பது?
சூர்யா, நீ வளர்ந்து பெரியவனான பின் பார்க்கலாம்.


சூர்யா, எங்கள் யாவருக்கும் நீ மிக முக்கியமானவன்.
அடிக்கடி நாம் சந்திக்க வேண்டும்


வசந்தன் மக்களுக்காக நிறைய செய்கிறான். நீ அவர்களின் தலைவனாக இருப்பாய்.
இந்தக் கணமே அவர்களை சந்திக்க வேண்டுமென்று தோன்றுகிறது.


சூர்யா வளர வளர வில்வித்தைகளிலும், போர்க் கலைகளிலும் பயிற்சி பெறுகிறான். ஆசிரமத்து சீடர்கள் அவனுடைய பயிற்சிகளை மேற்பார்வை இடுகின்றனர்.


வீரசிம்மன் தனது புதிய சேனாதிபதியுடன் ஆலோசனை நடத்துகிறான்.
ஜெயவர்மா! நமது எதிரிகள் எங்கே?
அவர்கள் ஒவ்வொரு நாளும் தங்கள் மறைவிடத்தை மாற்றிக் கொள்கிறார்கள் போலும்.


மலைப் பிரதேசங்களில் அவர்களைத் தேடி விட்டோம். குகைகளிலும் தேடினோம். காணவில்லை.
நாட்டை விட்டு ஓடி விட்டார்களா? எங்கே செல்வார்கள்?


ஜெயவர்மா, அவர்களை காட்டில் தேடினீர்களா?
மகாராஜா! காட்டில் அவர்கள் ஒளிந்து கொள்ள இடமே இல்லை.


ஜெயவர்மா, இந்த முறை நான் தாங்கிச் செல்கிறேன். வேட்டைக்கு ஏற்பாடு செய்.
ஆயினும் சும்மா இருக்காமல் முயற்சி செய்வோம். காட்டினை நாற்புறமும் சூழ்ந்து கொள்வோம்.


வீரசிம்மன் படைகளுடன் காட்டுக்கு வேட்டையாடச் செல்கிறான். படைவீரர்கள் காட்டினைச் சூழ்ந்து கொண்டு, மத்தளம் கொட்டி மிருகங்களை பயந்து ஓடச் செய்கின்றனர்.


சூர்யா, இன்று ஆசிரமத்தை விட்டு வெளியில் செல்லாதே.


புலி, சிங்கங்களே, ஆசிரமத்தைப் பார்த்துக் கொள்ளுங்கள்.


கரடி சூர்யாவைப் பார்க்க வெளியில் வருகிறது.


கரடி வலையில் சிக்குகிறது. வீரர்கள் ஆரவாரம் செய்கின்றனர்.


நிறுத்து!
யார் நீ? ஏன் நிறுத்த வேண்டும்?
தொடரும்.

# ஐயோ! மின்வெட்டு!!



''அப்பா! என்னப் புழுக்கம்!! அம்மா, அந்த மின்விசிறியைப் போடேன்'' என்றாள் வெளியில் இருந்து வந்த வீணா. ஆனால் அம்மா ஒன்றும் செய்யாமல் இருப்பதைக் கண்ட வீணா அப்போதுதான் விளக்கு களும் எரியாமல் இருப்பதைக் கண்டாள். ''ஐயோ! மின்சாரம் இல்லையா இப்போது!!'' என்று பரபரப்புடன் வீணா அம்மாவைப் பார்த்துக் கேட்டாள்.

''ஆம், வீணா'' என்ற அம்மா, ''இப்போது மின்சாரம் இல்லை. இன்றில் இருந்து தினமும் மூன்று மணி நேரம் மின்சாரம் வழங்குதல் துண்டிக்கப் படும் என்பது அரசு ஆணை'' என்றாள்.

''கடவுளே, பகல் நேரங்களை மின்விசிறி இல்லாமல் எப்படிக் கழிப்போம்?'' என்று வீணா முனகினாள். ''வேறு வழியில்லை, தண்ணீர் பற்றாக் குறையினால் மின்சாரம் போதிய அளவு உற்பத்தி ஆவதில்லை'' என்றாள் வீணாவின் அம்மா.

''அம்மா மின்சாரத்தை எப்படி சிக்கனப்படுத்துவது என்று தெரியுமா?'' என்று வீணா கேட்டாள். அதற்கு வீணாவின் அம்மா ''வீணாக மின்சாரத்தை செலவழிக்காமல் இருப்பதுதான் முதல் கட்டம். அறையை விட்டு வெளியே செல்லும் போது விளக்கு களையும் மின் விசிறியையும் நிறுத்தி விட்டாலே கூட, மின்சாரம் கணிசமாக மிச்சமாகும்'' என்றாள்.

தான் வழக்கமாகச் செய்யும் தவறு இது என்று அறிந்த வீணா மனம் வருந்தினாள். வீணாவின் அம்மா தொடர்ந்து ''குளிர் சாதனப் பெட்டியின் கதவை நீண்ட நேரம் திறந்து வைப்பதால், மின்சாரம் அதிகமாக செலவாகிறது. குளித்து முடித்தவுடன், மின்சார ஹீட்டரை நிறுத்தி விட வேண்டும். சுருக்கமாகச் சொன்னால், தேவைப் படாத போது எல்லா மின்சாதனங்களையும் நிறுத்தி விட வேண்டும்'' என்றாள்.

''நான் இனி இவற்றை நினைவில் வைத்துக் கொண்டு அதன்படி நடந்து கொள்வேன்'' என்று வீணாவும் உறுதி மொழி அளித்தாள்.

# உங்கள் பக்கங்கள் உங்கள் பக்கங்கள்

## உங்கள் விஞ்ஞானம்

### பசியைத் தூண்டும் வாசனை




மனிதனின் முக்கியமான ஐம்புலன் களின் உணர்ச்சிகளில் சுவை உணர்ச்சியும் ஒன்று. நமது வாயின் மேற் புறத்திலும் நாக்கிலும் உள்ள சுவை அரும்புகள் நாம் உண்ணும் உணவின் சுவையை அறிய உதவுகின்றன.

இனிப்பு, கசப்பு, உவர்ப்பு, காரம் ஆகிய நான்கு சுவைகளை மட்டுமே நாக்கினால் அறிய முடியும். எல்லாச் சுவைகளையும் அனுபவிக்க முகரும் உணர்ச்சியின் உதவியும் தேவை யாயுள்ளது. அதனால்தான் நமக்கு ஜலதோஷம் பிடித்திருக்கையில் நம்மால் உணவின் சுவையை சரியாக அறிய முடிவதில்லை. சில உணவுப் பொருட்களின் வாசனை நம் பசியைத் தூண்டி விடுகிறது. மீன்கள் கூட தனது உணவின் முழுச் சுவையையும் அறிய தனது வாயைத் தவிர தனது வால் செதில்கள் ஆகியவற்றையும் பயன் படுத்துகிறது. ஈக்கள் போன்ற சில பூச்சிகளின் சுவை அரும்புகள் அவற்றின் கால்களில் அமைந்துள்ளன.

## உங்கள் சுற்றுப்புறம்

### தவளைகளின் இருப்பிடம்

தவளை நீரிலும் நிலத்திலும் வாழக்கூடிய உயிரினம் என்றாலும், அது பெரும்பாலும் நீர் நிலைகளுக்கு அருகில் மட்டுமே அதிகமாகக் காணப் படுகிறது. ஆற்றங்கரைகளிலும் குளக் கரைகளிலும் தவளையிடும் முட்டைகள் குஞ்சு பொரித்து, குஞ்சுகள் பிறந்த வுடனேயே தண்ணீரில் நீந்த ஆரம்பிக் கின்றன. இவ்வாறு பிறவியில் இருந்தே தவளைகள் தண்ணீருக்கு அருகில் இருப்பதையே விரும்புகின்றன. இதற்கு முக்கியக் காரணம் ஒன்று உள்ளது.

தவளைகள் தங்கள் தோலின் பரப்பில் உள்ள நுண்துளைகள் மூலமே சுவாசிக் கின்றன. தவளைகள் அருந்தும் தண்ணீர் இந்தத் துளைகள் வழியே பெரும்பாலும் வெளியேறிவிடுகின்றன. இதனால் தவளையின் உடலில் தண்ணீர் நிற்காமல் போய் விடுகிறது. அதை சரிக்கட்டவே தவளைகள் அடிக்கடி நீர் அருந்த வேண்டி தங்கள் இருப்பிடத்தை நீர் நிலைகளுக்கு அருகிலேயே அமைத்துக் கொள்கின்றன.



## உங்களுக்குத் தெரியுமா?

### கண்மூடித்தனமான நடை

கண்களை மூடிக்கொண்டு நடப்பது கடினம் என்று நமக்குத் தெரியும். ஆனால் கொஞ்ச தூரத்திற்கு நேராக நடப்பது கூட கடினம் என்றால் ஆச்சரியமாக உள்ளதா? நம் கைகளைக் கூட நேராக வீசி நடக்க முடியாது. இந்த உண்மையை பல முறை சோதனைகள் செய்து கண்டு பிடித்துள்ளனர்.

இதற்குக் காரணம் நமது உடலின் இடது வலது பகுதிகள் சர்வ சமமாக



இருப்பதில்லை என்பதால் தான். நமது சுவாச உறுப்புகளின் அமைப்பு, சீரண உறுப்புகளின் அமைப்பு மற்ற எலும்புகளின் அமைப்பு ஆகியவற்றால் இட, வலப் பகுதிகளின் அளவும் எடையும் சிறிது வேறுபடுகின்றன. ஆகையால் கண்களை மூடி நடந்தால் நாம் நேராக நடக்காமல் கோணலாக நடக்கிறோம்.

## நம் இந்தியா

### மொழியும், இலக்கியமும்

1. புத்த சரிதம் என்னும் நூலை எழுதியவர் யார்?





2. 'ஞானபீட்' பரிசை முதன் முதலாகப் பெற்றவர் யார்?

3. இராமாயணத்தை தமிழில் கவி பாடிய கவிஞர் யார்?





4. கிருஷ்ண தேவராயருடைய சபையில் இருந்த ஒரு கவிஞன், நகைச்சுவையுள்ள விகடகவியாகவும் இருந்தான். அவன் பெயர் என்ன?

5. பாலகங்காதர திலகர் ஆசிரியராகப் பணியாற்றிய மராத்தி செய்தித்தாளான கேசரியைத் தோற்றுவித்தவர் யார்?



(விடைகள் 66ம் பக்கம்)

# போட்டோ வாக்கியப் போட்டி



**இந்த போட்டோக்களுக்கு தொடர்புடையதாக ஒரு சொல்லாகவோ அல்லது சிறு வாக்கியங்களாகவோ எழுதி அனுப்புங்கள்.**



KALANIKETAN BABU



NARAYANAMURTHY TATA

வாக்கியங்களைப் போட்டிக்கென உள்ள தபால் கார்டுகளில் எழுதி, இம்மாதம் 25-ஆம் தேதிக்குள் எமக்குக் கிடைக்குமாறு அனுப்புங்கள். சிறந்த வாக்கியங்களுக்குப் பரிசு ரூ.100/– போட்டி முடிவு ஜனவரி 2005 இதழில் வெளியிடப்படும்.
போட்டோ வாக்கியப் போட்டி, அம்புலிமாமா, 82, டிஃபென்ஸ் ஆஃபீஸர்ஸ் காலனி, ஈக்காட்டுத்தாங்கல், சென்னை – 600 097.

**வாழ்த்துகள்!**

**செப்டம்பர் 2004 இதழில் வெளியிடப்பட்ட போட்டியில் வெற்றி பெற்றவர் :**

மகா கணபதி
169/6, கோல்டன் ஜுபிலி காலனி,
அண்ணாநகர்,
சென்னை-600 040.

பரிசு பெற்றவை





''வித்தைக்கல்ல!
விற்பனைக்கு!''
''விற்பனைக்கல்ல!
வித்தைக்கு!''

## 'நம் இந்தியா?' விடைகள் (பக்கம் 65)

1. அஸ்வகோஷா.
2. ஜி. சங்கர குரூப் (மலையாளம்).
3. கம்பர்.
4. தெனாலி ராமன்.
5. விஷ்ணு சிப்லுங்கர் (1850-82).

Printed and Published by B. Viswanatha Reddi at B.N.K. Press Pvt. Ltd., Chennai - 26 on behalf of Chandamama India Limited, No. 82, Defence Officers Colony, Ekkatuthangal, Chennai - 600 097. Editor : B. Viswanatha Reddi (Viswam)

Ambulimama (Tamil) November 2004 Regd No. TN/PMG(CCR)-592/03-05
Regd. with Registrar of Newspaper for India No. 1095/57
Licensed to post without prepayment No. 377/03-05 Foreign - WPP. No. 378/03-05




India's largest selling sweets & toffees.




# Be the luckiest one in town!

Collect wrappers to complete the lucky letters "NUTRINE ECLAIRS", answer the question and you can win fabulous prizes!




**100** Nokia camera mobile phones to be won!



**100** LG 14" Colour TV's to be won!



**5000** Nutrine Watches to be won!




**20,000** Business Games to be won!




*Conditions apply

கீழ்க்கண்ட கேள்விக்கு பதிலளியுங்கள் ('டிக்' செய்யுங்கள்)
"NUTRINE ECLAIRS" என்ற வார்த்தையில் எத்தனை எழுத்துக்கள் உள்ளன?

☐ 10 ☐ 12 ☐ 14

பெயர் .................................................. வயது ....................
கதவு எண் .......... தெரு ..................................................
ஊர்/கிராமம் ........................ மாவட்டம் ..................................
மாநிலம் ................ பின்கோடு ......... தொலைபேசி ....................

ரேப்பர்களை அனுப்பவேண்டிய முகவரி:
நியூட்ரின், போஸ்ட் பாக்ஸ் எண். 1056, கீழ்ப்பாக்கம், சென்னை - 10.

NUTRINE CONFECTIONERY COMPANY PVT. LTD., 2-1285, B.V. REDDY COLONY, CHITTOOR - 517 001 (A.P.) nutrinesales@vsnl.net